# அமைதியும் ஆனந்தமும்

## பாகம் - 1

(அத்தியாயம் : 01 முதல் 06 வரை)

ஜீவாத்ம விசாரணை

# ஸ்ரீமத் பகவத்கீதை

701 ஸ்லோகங்களும்

மூலம்

## ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா

## தமிழ்ப்பாடல்களாய்

இயற்றியவர்
ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி

# ஸ்ரீமத் பகவத்கீதை

தமிழில் பாடல்களாய் இயற்றியவர்

ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த சரஸ்வதி

Print Type : E-Book in PDF format

First Edition : 2023

Revised Edition: 2025

For Suggestions and Corrections,

Please email to: Shri. K.Balachandran omsivakbc@yahoo.co.in

# குருபரம்பரையின் பாதையில்
# In the Path of GURUPARAMPARA




## ஸ்வாமி கிருஷ்ணாத்மானந்த ஸரஸ்வதி
## Swami Krishnathmananda Saraswathi

ஹரி: ஓம்!

பூஜ்ய குருஜி

## ஸ்வாமி தேஜோமயானந்தாஜி

## சின்மய மிஷன்



ॐ

**Dear Krishnatmananda,**

Hari Om!

I am glad that you have completed the project of the Geeta as Tamizh songs. Congratulations!

With Love & Om,

**Tejomayananda**

**ஓம் தத் ஸத்**



# || சமர்ப்பணம் ||

**பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிற்கும்**

பூஜ்யகுருதேவ் **ஸ்வாமி சின்மயானந்த மகராஜ்**

அவர்களுக்கும்

பூஜ்யகுருஜி **ஸ்வாமி தேஜோமயானந்தாஜி**

அவர்களுக்கும்

**ஸ்ரீமத் பகவத்கீதையின் ஶ்லோகங்களை**

தமிழ்ப்பாடல்களாய் சமர்ப்பிக்கின்றோம்

இக்கீதையை உபதேசித்தருளி, அதைப் படித்தும், புரிந்துகொண்டும், அதன்படி வாழவும் வழிகாட்டியருளிய

ஆச்சார்யர்

**ஸ்வாமி வாகீஶானந்த ஸரஸ்வதி**

அவர்களின் திருப்பாதங்களிலும்

இக்கீதைத் தமிழ்ப்பாமாலையை

அர்ப்பணிக்கின்றோம்

# ஆசியுரை



श्री श्री जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम्,
दक्षिणाम्नाय श्रीशारदापीठम्, शृङ्गेरी
**Sri Sri Jagadguru Shankaracharya Mahasamsthanam**
**Dakshinamnaya Sri Sharada Peetham, Sringeri - 577 139.**

दक्षिणाम्नाय शृङ्गेरी श्रीशारदापीठाधीश्वर
जगद्गुरु शङ्कराचार्य श्रीश्रीश्रीभारतीतीर्थमहास्वामिकरकमलसञ्जातानां
जगद्गुरु श्रीश्रीश्रीविधुशेखरभारतीमहास्वामिनामनुग्रहसन्देशः

அத்வைத ஸித்தாந்தத்தைப் போதிக்கும் நூல்களுள் ஸ்ரீமத்பகவத்கீதை மிகவும் முக்கியமானது. அர்ஜுனனை நிமித்தமாகக் கொண்டு உலகோரனைவருக்கும் பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே இதை உபதேசம் செய்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்பு. இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வில் எதிர்கொள்ள வேண்டிவரும் சவால்களுக்கான தீர்வு இதில் உபதேசிக்கப்பட்டுள்ளது. இதைப் படிப்பதன் மூலம் மனிதன் தன்னுடைய பிரச்சனைகளைத் தீர்த்துக்கொள்ளக்கூடியத் திறனைப் பெறுகிறான். இந்த ஒரு நூலைச் சரியாகப் படித்து இதில் உபதேசித்தபடி வாழ்வதின் மூலமே ஒருவன் தன்னுடைய வாழ்க்கையை பயனுள்ளதாக்கிக் கொள்ளமுடியும். இதில் பகவான் செய்துள்ள உபதேசங்களைத் தெளிவாக அறிந்து கொள்வதற்காக ஜகத்குரு ஸ்ரீ ஆதி சங்கராசார்யாள் கீதாபாஷ்யத்தை இயற்றி நம்மை அனுக்கிரஹித்துள்ளார்கள். இதை ஒரு தகுதிவாய்ந்த குருவினிடம் கற்றுணர்ந்து அதன்படி தன்னுடைய வாழ்க்கையை நடத்துவதற்கு ஒவ்வொரு மனிதனும் முயற்சி செய்யவேண்டும். இவ்விஷயத்தை மனதில் நன்றாகப் பதித்துக்கொண்டு சின்மயா மிஷனைச் சேர்ந்த ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி அவர்கள் கீதையைப் படித்து அதை வெகுகாலம் அனுஸந்தானம் செய்து "அமைதியும் ஆனந்தமும்" என்ற தலைப்பில் கீதையிலுள்ள சுலோகங்களை தமிழில் சிச்சிறு பாடல்களாக எழுதியுள்ளார். தமிழில் கீதையின் பொருளைத் தெரிந்துகொள்ள விரும்புபவர்களுக்காக இப்புத்தகத்தைப் பிரகடனம் செய்வது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். இந்த நல்ல காரியத்தைச் செய்துள்ள ஸ்வாமிகளுக்கும் மற்றும் இதைப் படிக்கும் ஆஸ்திக பெருமக்களுக்கும் சிரேயஸ் கிடைக்கட்டும் என்றும் ஆசீர்வதிக்கிறோம்.

श्रीः

इति नारायणस्मरणम्
विधुशेखरभारती
शृङ्गेरीजगद्गुरु श्रीश्रीश्रीभारतीतीर्थ महास्वामिनां करकमलसञ्जातः

शृङ्गगिरिः
शोभकृद्वत्सरकन्यामासकृष्णत्रयोदशी
गुरुवासरः १२.१०.२०२३

# ஆசியுரை

ஸ்ரீவித்யா பாது மாம் ஸதா

ஸ்ரீஸ்ரீ ஜகத்குரு பதரி சங்கராச்சார்ய மஹாஸம்ஸ்தானம்
சகடபுரம்-ஸ்ரீவித்யாபீடம், ஸ்ரீக்ஷேத்திர சகடபுரம்




ஸ்வஸ்தி! ஸ்ரீமதகிலஜகத்வித்யோதமானஹ்ருத்யானவத்யாத்யவித்யாத்யுதிகுத்யோதிக்ருதபேதவித்யானாம்; ப்ரணவமனுஸ்மரணார்ஹணாப்ரணயப்ரீணிதஸ்மரஹரண-பவதரணநதசரண-ஜிதகரண-சர்வாணீரமணரமணீயசரணஸ்ரீபர்ணானாம்; ஸர்வஸர்வம்ஸஹாஸன்சரணதேவபரிசரண-வித்யாசரண-ஸ்தவகரண-பக்தசித்பரணஸமேதிதஸதாதாஸனாதனதர்மதாம்னாம்; பாஷண்டமதஷண்டகண்டனோத்தண்டப்ரகாண்டபாண்டிதீஸம்மண்டிதாசாமண்டலானாம்; ஆர்யவர்யபாராசர்யவசஃகார்யபாஷ்யஸபர்யாபர்யாயமோதிதார்யதுர்யாணாம்; அபிரூபவல்லபஸம்பாயகஸபாஸம்பாவிதகலாஸம்ப்ருதாம்போபவபூபாமினிப்ருபங்காபிமானஸம்பேதகானாம்; விகதநீதிவஸுமதீபதிஸுநீதிபோதனாதிநிக்ருதயசோதநானாம்; நிகிலவிபுலாதலஸஞ்சலனஸஞ்சாலிததாசபலகோலாஹலபலாவலேபவிதலனவிலாஸகலிதவிமலவேதாந்தமதமதல்லிகாஸமுல்லாஸிதோபலப்திமல்லேகானாம்; மஹாமோஹக்ராஹநிர்ஹரணஹரிப்ரஹரணாயமானானாம்; தனித்வஸ்தஸமஸ்தநாஸ்திகஸ்தோமவிஸ்த்ருதவாக்விஸ்தராணாம்; ஸத்யோகநிஷ்ட ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்யஸச்சர்யபகவதாசார்யஜகத்குருஸ்ரீஸ்ரீசங்கரபகவத்பூஜ்யபாதானாம்; ஸச்சிஷ்யவர்யஸ்ரீமஜ்ஜகத்குருத்தராம்னாயஜ்யோதிஷ்பீடாதீச்வர ஸ்ரீமதாசார்யஸ்ரீதோடகபகவத்பாதப்ரவர்திதஸ்ரீமத்வேதாந்தஸத்குருபரம்பராவிப்ராஜமானயோகிராஜ ஸ்ரீஸ்ரீஸத்யதீர்த்தமஹாமுனீந்தரஸத்ஸம்பரதாயவிலஸிததுங்கபத்ராதீரநிவாஸஸ்ரீசகடபாதாக்யமஹர்ஷிபரிபாவிதாச்ரமஸ்ரீக்ஷேத்ரசகடபுரவராதீச்வர ஸ்ரீசத்குருதத்தாத்ரேய-ஸ்ரீசந்த்ரமௌளீச்வர-ஸ்ரீவித்யாவிச்வேச்வரஸ்ரீவித்யாம்பிகாஸ்ரீமத்ராஜராஜேச்வரீதேவ்யம்பா-ஸ்ரீஸந்தானவேணுகோபாலக்ருஷ்ணதிவ்யபாதபத்மாரதகஸ்ரீவித்யாபீடாதீச்வரபரமபூஜ்யபாதஸ்ரீமஜ்ஜகத்குருஸ்ரீஸ்ரீராமசந்த்ரானந்ததீர்த்தமஹாஸ்வாமிகுருகரகமலானுக்ரஹஸஞ்ஜாத

## ஜகத்குரு ஸ்ரீவித்யாபிநவ ஸ்ரீக்ருஷ்ணாநந்ததீர்த்தஸ்வாமிபி:

அஸ்மதந்தேவஸதாம் ஸ்ரீமதாம் கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி
ஸ்ரீதேவதாராதனஸமயே காலத்ரயவிரசிதா: சுபம்யுதரா ஆசீ:பரம்பரா: ஸமுல்லஸந்துதராம்.

பகவத் கீதா கிஞ்சித் அதீதா..... எனவும், கேயம் கீதா நாம ஸஹஸ்ரம்..... எனவும் பஜகோவிந்தத்தில் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அருளியுள்ளார்கள். இத்தகைய உலக ப்ரசித்தி மிக்க கீதையானது வாழ்வியல் பாடமாகும். கீதையை முறையாகப் படித்தவர்களுக்கு வாழ்வை சுலபமாக வாழத்தெரியும் அளவிற்கு ஞானம் கிட்டும்.

கீதாஸ்ரயேऽஹம் திஷ்டாமி கீதா மே சோத்தமம் க்ருஹம் ।
கீதா ஜ்ஞானமுபாஸ்ரித்ய த்ரீந்லோகாந் பாலயாம்யஹம் ॥

கீதையை அண்டி நான் வாழ்கிறேன். கீதைதான் என்னுடைய சிறந்த வீடு, கீதையின் ஞானத்தைக் கைக்கொண்டு நான் மூவுலகங்களையும் காக்கிறேன் என வராஹ புராணத்தில் பகவான் அருளுகின்றார். இந்தகைய மஹா கீர்த்தி உடைய ஸ்ரீமத் பகவத்கீதையை நீங்கள் எளிய நான்கு வரி தமிழ்ப்பாக்களாக உரையாக எழுதியுள்ளது அறிந்து சந்தோஷமடைகின்றோம். பக்தியும், தமிழ் ஆர்வமும் கொண்ட அன்பர்கள் இதனை ஓதியுணர்ந்து கீதையின் பொருளினை உள்வாங்கி வாழ்வில் சிறந்தோங்கிட உதவியாக இந்நூல் அமையும். நீங்கள் மென்மேலும் இது போன்ற அறப்பணிகளில் ஈடுபட்டு, சமூகத்திற்குப் பயனுள்ள நற் செயல்களைச் செய்திட அம்பாளின் சரண கமலங்களைப் பிரார்த்தித்து ஆசிக்கிறேன்.



சுபக்ருத் வருஷம்
5-2-2023, ஞாயிற்றுக்கிழமை
மாக பூர்ணிமா

இதி ஸ்ரீநாராயண ஸ்ம்ருதய:

# ஆசியுரை

ॐ


**THE DIVINE LIFE SOCIETY (REGD.)**

**(ESTABLISHED: 1936)**

Propagates Yoga and Vedanta and the Ethical and Spiritual Culture of India. Promotes Universal Love, the Unity of Religions, the Ideal of Brotherhood, and the Spirit of Service among Mankind.

***(Founder:* H.H. SRI SWAMI SIVANANDA)**

P.O. SHIVANANDANAGAR – 249 192, DISTT. TEHRI-GARHWAL, UTTARAKHAND, HIMALAYAS, INDIA
*Phone:* (0135) 2430040, Fax: (0135) 2442046, *Rly. Stn.:* RISHIKESH, *N.Rly.*)
**website:** www.sivanandaonline.org **E-mail:** generalsecretary@sivanandaonline.org


ॐ

**ஆசியுரை**

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவில்லை"

என்ற மறையோர் வாக்கின்படி நாம் இப் புவி வாழ்க்கையை வாழ்ந்திட வழிகாட்டித் தரும் வேதநெறிகளை, விளக்கித் தருபவை அறநூல்கள். அவற்றுள் ஒன்றான "பகவத்கீதை", திருப்பாற்கடலில் பாம்பணை மீது அறிதுயில் கொள்ளும் பரமன், பார்த்தனுக்கு அன்று போர்க்களத்தில் உபதேசித்து அருளியது ஆகும். இந்நூலினை மெஞ்ஞானிகள் போற்றுவது போலவே இக்கால அணு விஞ்ஞானிகளான, ஐன்ஸ்டைன், ஓப்பன்ஹைமர் போன்றோரும் போற்றுவது இதன் தனிச் சிறப்பினை பறைசாற்றுகின்றது. இந்நூல் உலகின் பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு உலகப் பொதுமறையாக விளங்குவது, மனித குலம் செய்த புண்ணியமே ஆகும். அருமறைகள் நிறைந்து நிற்கும் தொன்மையான தமிழ் மொழியிலும் இந்நூல் முன்பு பலரால் தமிழ் ஆக்கப்பட்டு, தமிழர்களின் சிந்தனைக்கும், வந்தனைக்கும், செயற்பாட்டிற்கும் விருந்தாக அமைந்துள்ளதை நாம் காண்கிறோம். காலத்திற்கு ஏற்றவாறு ஒரு மொழியில் மாற்றங்கள் ஏற்படுவது, காலத்தை வென்று நிற்கும் அதன் தன்மையை காட்டுகின்றது. எனவே தற்கால தமிழில், தமிழர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் எளிய தமிழில் பகவத்கீதையை வழங்கும் முயற்சியே, சின்மயதாசன் திரு சுவாமி கிருஷ்ணாத்மாநந்தரின் இந்த நூல். 'இல்லந்தோறும் பகவத் கீதை' என்ற கீதா ஞானயக்ஞ பணியை பல்லாண்டுகள் புரிந்த அனுபவத்தின் பயனாக, சுவாமி கிருஷ்ணாத்மாநந்தர், கீதையை இனிய எளிய பாடல்களாக ஆக்கித் தந்துள்ளார். வாழ்க்கை கடலில், ஆசைப் புயலில் சிக்கித் தவிக்கும் மனித உள்ளங்களுக்கு கரையேறும் சாத்தியத்தை காட்டும் கலங்கரை விளக்கமாக இந்நூல் அமைய எல்லாம் வல்ல கீதாச்சாரியன் அருளை வேண்டுவோம்.

Swami Padmanabhananda

(சுவாமி பத்மநாபானந்த)
பொதுச்செயலர்,
தெய்வீக வாழ்க்கைச் சங்க தலைமையகம்,
ரிஷிகேசம்.
நாள்- 20 - 2 - 2022

# ஆசியுரை

உ
ப்ரஹ்மைவ ஸத்யம்

**SRI SWAYAMPRAKASA AVADHUTHA SADASIVA TRUST**



Sri Sri Judge Swamigal Adhishtanam, East 7th Street,
PUDUKKOTTAI-622 001
Phone: 04322-221440, 222128
Email: sribhuvaneshwari@gmail.com



## ஆசியுரை

Date : 07/04/2023

**பார்தா2ய ப்ரதிபோ3தி4தாம் ப4க3வதா நாராயணேன ஸ்வயம்**
**வ்யாஸேன க்3ரதி2தாம் புராணமுனினா மத்4யே மஹாபா4ரதம்**
**அத்3வைதாம்ருதவர்ஷிணீம் ப4க3வதீமஷ்டாத3ஶாத்4யாயினீம்**
**அம்ப3 த்வாமனுஸந்த3தா4மி ப4க3வத்3கீ3தே ப4வேத்3வேஷிணீம்**

போற்றத்தக்க முனிவராகிய வியாஸரால் மஹாபாரதத்தின் நடுவில் வைக்கப்பட்டவளும், அர்ஜுனனுக்காக பகவான் நாராயணனாலேயே உபதேசிக்கப்பட்டவளும், அத்வைதமாகிய அமுதத்தை வர்ஷிப்பவளும், பதினெட்டு அத்தியாயங்களைக் கொண்டவளும், ஸம்ஸார ஸாகரத்தின் எதிரியும் ஆன பகவத் கீதை என்ற அன்னையை நமஸ்கரிக்கிறேன்.

கீதையின் பெருமையை இந்த ஸ்லோகம் கூறுகிறது. ஸாக்ஷாத் பகவானான நாராயணனாலேயே உபதேசிக்கப்பட்டது. அதே நாராயணனின் அம்சமே ஆன வியாஸரால் மகாபாரதம் என்ற நூலில் நடுவில் பதக்கம் போல பிரகாசிக்கிறது.

பகவத்கீதை ஒரு தத்துவ நூல் ! பாண்டவர்கள் ஐவரும் மனிதனின் ஐம்புலன்கள்; ஸ்ரீகிருஷ்ணன் இவற்றைச் செலுத்தும் நம் மனம்; கௌரவர் நூற்றுவர் மனித மனத்தில் ஒளிந்திருக்கும் கணக்கற்ற தீய குணங்கள்; கௌரவரின் பார்வையற்ற தந்தை நம் குருட்டுப் புத்தி;

பாசம் மேற்கொண்ட அர்ச்சுனன் தன் உற்றாரைப் போரில் கொல்வதா என்ற மயக்கத்துடன் இருந்தபோது (மாயை வசப்பட்ட ஆத்மா ஞானத்தை அடையும் வழியில் தயங்கி நிற்கும் போது) ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்சுனனின் அறியாமை எனும் மயக்கத்தைப் போக்கி, தொடங்கிய யுத்தத்தை செய்துமுடிப்பது தான் சரியானது என்று போதிக்கிறார்.

உபநிஷதங்கள், ப்ரம்ம சூத்திரம், பகவத்கீதை ஆகிய மூன்று நூல்களும் ப்ரஸ்தானத்ரயம் என்று குறிக்கப் படுகின்றன. நம் ஸநாதன தர்மமான ஹிந்துமதத்தை வேதமதம் என்று சொல்வர். வேதங்களில் இருந்து எடுக்கப்பட்ட ஸாரமாக உபநிஷதங்கள் காப்பாற்றி வைக்கப் பட்டு இருக்கின்றன. உபநிஷதங்களின் தன்மை என்ன அதன் போக்கு எத்தகையது என்று இயம்புவது ப்ரம்மசூத்திரம். அதில் அடங்கியுள்ள கருத்துக்களை எல்லாம் தெளிவுபட விளக்குவது பகவத் கீதை.

**ஸர்வோபநிஷதோ3 கா3வோ தோ3க்3தா4 கோ3பாலநந்த3ந:**
**பார்தோ2 வத்ஸ: ஸுதீ4ர்போ4க்தா து3க்3த4ம் கீ3தாம்ருதம் மஹத்!**

பசுக்களாக உபநிடதங்கள் நிற்க, அவைகளிடம் பால் கறப்பவனாக கோபாலநந்தனன், பாலைப் பருகும் பசுங்கன்றாக பார்த்தன், அதனால் கிடைத்தது அமுதமான பாலாகிய கீதை!

5000 ஆண்டுகளுக்கு முன் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு சொன்ன உபதேசங்கள் எல்லா காலத்திற்கு ஏற்றதாக அமைந்தது தான் இந்த தனிச்சிறப்பு. ஒருவரின் அனைத்து விதமான பிரச்சனைகளுக்கும் தீர்வாக இந்த உபதேசம் அமைந்துள்ளது. வாழ்க்கை மற்றும் வாழ்க்கையின் உண்மைகள் ஆகியவற்றை இந்த நூல் எடுத்துச் சொல்கிறது. ஒரு சாதாரண மனிதனுக்கு என்னவெல்லாம் சந்தேகம் வருமோ அவை அத்தனைக்கும் விளக்கமாக பதிலளித்துள்ளார் பகவான் கிருஷ்ணர். அதனாலேயே அனைத்து நூல்களுக்கும் தலைமை நூலாக பகவத் கீதை விளங்குகிறது.

சங்கரர்,ராமானுஜர், மத்வர் ஆகிய மூன்று ஸம்ப்ரதாய ஆசாரியர்களும் இந்த நூல்களுக்குத் தத்தமது பார்வையின் அடிப்படையில் உரை எழுதியிருகிறார்கள்.

பிற்காலத்தில் பால கங்காதர திலகர், வினோபாவே, காந்திஜி, அரவிந்தர், ஸர்வபள்ளி ராதாகிருஷ்ணன், சின்மயானந்தர், சித்பவானந்தர் ஆகியோர் ஸ்ரீபகவத் கீதைக்கு விரிவுரை எழுதியுள்ளார்கள்.

மஹாகவி பாரதியாரும் தீந்தமிழில் பகவத் கீதையை மொழிபெயர்த்துள்ளார்.

அந்த வரிசையில் அளவில்லாப் பெருமை கொண்ட பகவத் கீதையை சின்மயா மிஷனைச் சேர்ந்த நம் அன்புக்குரிய ஸ்வாமி க்ருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி, பகவத் கீதையின் 700 ச்லோகங்களையும் 700 தமிழ்ப்பாடலாக இயற்றியுள்ளார்.

இந்நூல் ஆன்மீக ஸாதகர்களுக்கு மட்டுமல்லாது, `சொல்லும் பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்' எனும்படி தீந்தமிழ் அறிந்தோர் அனுபவித்து உணரும்படி இருக்கும் என்பதில் ஐயமில்லை. நூலாசிரியருக்கு நமது வாழ்த்துக்கள் என்றென்றும் உரித்தாகுக!

இந்நூலினை படித்து இன்புறும் எல்லா பக்தர்களுக்கும், ஸாதகர்களுக்கும் பரமானந்த வாழ்வு நிலைத்திருக்க ஜகன்மாதா ஸ்ரீ புவனேச்வரி தேவியை பிரார்திக்கிறேன்.

ஆனந்தம் சுபம் மங்களம் ! ஜய புவனேச்வரி!

**ஸ்ரீ ப்ரணவாநந்த ஸ்வாமின:**
ஸ்ரீ புவனேச்வரி அவதூத வித்யா பீடம்
புதுக்கோட்டை

# நூன்முகம்

## ஸ்ரீமத் பகவத்கீதை ஓர் ஆனந்த வர்ஷிணி – துக்க நிவாரணி

ஸ்ரீமத் பகவத்கீதை மிகப் பழமையான ஓர் நூல். பகவான் ஸ்ரீகிருஷ்ணரால் நேரடியாக அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது. எவ்விதம் சஹஸ்ரநாமம் என்றால் “விஷ்ணு சஹஸ்ரநாமம்” என்று அறியப்படுகிறதோ, அவ்விதமே கீதை என்றாலே ஸ்ரீமத் பகவத்கீதை என்று அனைவருக்கும் தெரிந்த ஓர் நூலாகத் திகழ்கிறது.

“ஏகம் சாஸ்திரம் தேவகீ புத்ர கீதம்” என்று சிவபெருமான் பார்வதியிடம் கூறியதாக ஒரு கீதாமாஹாத்மிய ஶ்லோகம் பறைசாற்றுகிறது. பகவத்கீதா கிஞ்சிததீதா . . . யமேனநசர்ச்சா” என்று பஜகோவிந்தத்தில் ஆதிசங்கரர் கீதையை யாரொருவன் சிறிதளவே படித்தாலும், யமனிடம் யாதொரு பயமுமில்லை என்று பறைசாற்றுகிறார்.

பலமகான்கள் கீதைக்கு விரிவுரைகளை எழுதியுள்ளனர். மேலும், பலவிதங்களில் அதன் பொருள்களும், பயன்களும் நூலாகவும், பாடல்களாகவும் எழுதப்பட்டுள்ளன.

இக்கீதை நூல்களை ஆராய்ந்தால் எதற்காக அது உபதேசிக்கப்பட்டது என்பதில் அனைவருக்கும் ஓர் ஒருமித்த எண்ணமும், கருத்தும் உள்ளதை நாம் நன்றாக அறிய முடிகின்றது. அது யாதெனில், “சோக-மோகம்” எனும் சம்சார சமுத்திரத்தில் [சுகதுக்கமெனும் துன்பக்கடலில்] மூழ்கித் தவிக்கும்

அனைவரையும், மூழ்காமல் உய்வித்துக் கரையேற்றும் பொருட்டு, அர்ஜுனனை நிமித்தமாகக் கொண்டு இந்த ஞானசாரத்தை [ வேத / வேதாந்த சாரத்தை ] கீதையென்னும் ஞானாம்ருதமாக நமக்கு பகவான் ஸ்ரீகிருஷ்ணர் உபதேசித்துள்ளார்.

ஸ்ரீகிருஷ்ணரின் இக்கீதையில் 'கர்மோபதேசம், பக்தியுபதேசம், யோகோபதேசம், தியானோபதேசம் என இவ்விதம் பலப்பல உபதேசங்கள் இருப்பினும், தம்புரா சுருதி போன்று அனைத்தினூடேயும் ஞானாம்ருத உபதேசமானது ஆதாரச் சுருதியாயுள்ளதை ஞானியர் பலர் அறிந்துளர்.

ஒருமுறை ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீஸ்ரீ மகாசன்னிதானம் ஸ்ரீஸ்ரீஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகள் பக்தர்களின் பிராத்தனைக்கு இரங்கி 'சின்மய கைவல்யா- சேலம்' எனுமிடத்திலுள்ள ஸ்ரீபிரம்ம கிருஷ்ணர் சன்னிதிக்கு 2012-ஆம் ஆண்டு மார்ச் மாதம் எழுந்தருளி ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவிற்கு புஷ்பார்ச்சனை செய்தபின் குழிமியிருந்த பக்தர்களை ஆசீர்வதித்தார்கள். பின்னர் அங்கிருந்து புறப்படும் சமயம் சின்மயமிஷினின் திட்டங்களைப் பற்றி நான் மகாசன்னிதானம் அவர்களிடம் கூறியபோது,அவர்கள் அனைவரையும் பார்த்து "ஸ்வாமி சின்மயானந்தரால் மற்றும் அவருடைய பெருமுயற்சியினால் ஏற்படுத்தப்பட்ட சின்மய மிஷன் வாயிலாக உபநிஷத்துகளின் மற்றும் ஸ்ரீமத் பகவத்கீதையின் சாராம்சமானது ஆங்கில மொழியில் பலருக்கும் கற்றுக் கொடுக்கப்பட்டதனால், ஸம்ஸ்கிருத மொழி அறியாதபோதும் அவர்களால் கீதையின் சாராம்சத்தைப் புரிந்து கொண்டு அதன்படி வாழ்க்கையை நடத்த முடிகிறது" என்று கூறி அருளினார்கள்.

அங்கு கூடியிருந்தோரிடம் ஸ்ரீமத் பகவத்கீதையைப் படித்துப் பயன் பெறுமாறு உற்சாகமூட்டினார்கள். இதைவிட மிகப்பெரிய அனுக்கிரகம் இருப்பதாகத் தோன்றவில்லை.

அதேபோல், காஞ்சி மஹாபெரியவா என்று அன்புடன் அழைக்கப்படும் ஸ்ரீஸ்ரீஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் முன்பு ஒருமுறை மைலாப்பூரில் தங்கியிருந்த பொழுது, குருதேவர் ஸ்வாமி சின்மயானந்த மஹராஜின் ஞானவேள்வியானது நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில், அங்குள்ள சிலர் காஞ்சி மஹாஸ்வாமிகளிடம் 'ஸ்வாமி சின்மயானந்தர் கீதையையும், உபநிஷத்துகளையும் அதன் அர்த்தங்களையும் ஆங்கிலத்தில் அனைவருக்கும் விளக்கிச் சொல்கிறார்; அவரை இவ்விதம் செய்யக்கூடாதென்று கண்டிக்க வேண்டும்' என்று முறையிட்டனர். அப்பொழுது, காஞ்சி மகாபெரியவா "நாமும் கற்பதில்லை, சொல்லிக் கொடுப்பதுமில்லை. பிறர் சொல்லிக் கொடுப்பதையும், கற்பதையும் கண்டிக்கச் சொல்வது எவ்விதம் சரி, அது தவறல்லவா" என்று வலியுறுத்தி யதார்த்தமாகக் கூறினார்.

எனவே, இவ்விதம் பல மகான்களால் பாதுகாக்கபட்டு வருகின்ற இப்பகவத்கீதை எனும் சாஸ்திரத்தின் ஶ்லோகங்களின் அர்த்தத்தை எளிதில் படித்தும், புரிந்துகொண்டும் வாழ தமிழ்ப்பாடல்களாய் திருஅருளாலும் குருஅருளாலும் வெளித்தோன்றியதே இப்புத்தகம்.

## ஸ்ரீமத் பகவத்கீதை தமிழ்ப்பாடல்களாய்த் தோன்றியவிதம்

இவ்விதம் பலப்பலவிதமான பெருமைகளைக், கொண்ட ஸ்ரீமத் பகவத்கீதையின்பால், எமக்கு ஈர்ப்பு ஏற்படுவதற்கு ஓர் முக்கியக் காரணமாய் அமைந்தவர் எனது - தமிழ்நாடு சின்மய சாந்தீபநீ சாதனாலய – ஆச்சார்ய, ஞானப்பிழம்பு, சொல்வளச் செல்வர், தவத்திரு ஸ்வாமி வாகீஶானந்த ஸரஸ்வதி அவர்கள். எங்களின் சின்மய பிரம்மச்சாரி ஆன்மிக குருகுலப் பயிற்சியானது நிறைவுறும் சமயம் [ மூன்று வருடம் 1990-1993 ], ஆச்சார்யரானவர் ஓர் வழிகாட்டுதலை வழங்கினார்.

“கடந்த மூன்று வருடங்களாக ‘ப்ரம்ம சத்தியம் ஜகத் மித்யா’ என்ற வேதாந்த சாரத்தைச் சந்தேகமறக் கற்றுக் கொண்டீர்கள். இனி உங்களின் சாதனைப் பயணத்தில் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு வேதாந்த நூலை விருப்ப நூலாக ஏற்றுக்கொண்டு, வாழ்நாள் முழுவதும் அதன் கருத்துக்ளை ஆழமாக மீண்டும் மீண்டும் படித்தும், சிந்தித்தும் தெளிவுபெற வேண்டும்” என்று உபதேசித்தார். ஆச்சார்யர் அனைத்து வித்யார்த்திகளையும் தாங்கள் விருப்பப் பாடமாகப் பயில விரும்பும் நூலைத் தேர்வு செய்யுமாறு பணித்தார். ‘திருவாசகம், திருப்புகழ், உபநிஷத்’ என்று ஆளுக்கு ஒரு நூலை வித்யார்த்திகள் தேர்வு செய்தனர்.

எம் முறை வரும் பொழுது, எதை எடுப்பது என்று சிந்திக்காமல், “ஆச்சார்யரே! தாங்களே கூறுங்கள்” என்று வேண்டினேன். அவர் “நீ ஸ்ரீமத் பகவத்கீதையை எடுத்து, நன்றாய் வாழ்நாள் சாதனை நூலாகப் பயில்” என்றார்.

ஆச்சார்யரின் வார்த்தைகளைச் சிரமேற்கொண்டும், மனதில் நன்கு பதித்துக் கொண்டும், ஸ்ரீமத் பகவத்கீதையை நன்றாகப் படித்தும் அதன் ஆழமான கருத்துக்களைப், புரிந்துகொள்ள முயன்று வந்தோம். அவ்விதம் கற்றறிந்த விஷயங்களை ஞான வேள்விகளாகவும், தொடர் வகுப்புக்களாகவும் அனைவரிடமும் பகிர்ந்து கொண்டு வருகின்றோம்.

**ஜனவரி 2017-ல்**, 'வேதாந்த மனனத்திற்காக, ரிஷிகேசத்தில் அமைந்துள்ள ஸ்வாமி சிவானந்த மஹராஜ் அவர்களின் ஆசிரமத்தில் ஒரு வருட காலம் தங்கியிருந்தோம். அச்சமயம், கீதை ஶ்லோகங்கள் முழுவதையும் தமிழ்ப்பாடல்களாய் இயற்ற **முழுக்க முழுக்க ஓர் ஆத்ம சாதனையாகச் செய்ய வேண்டும் எனும் எண்ணம்** சங்கல்பமாய் நவம்பர் மாதத்தில் தோன்றியது.

கீதையின் ஸம்ஸ்கிருத மூல ஶ்லோகத்தின் ஒவ்வொரு வார்த்தையின் பொருளும் வெளிப்படும் விதத்தில் தமிழ்ப்பாடல்களாய் அமைக்க விரும்பினோம். கோவையாகவும், அதேசமயம் அழகாகவும் அமைய வேண்டும் என்று பகவான் ஸ்ரீகிருஷ்ணரையும், குருதேவரையும் வேண்டி இத்தமிழ்ப்-பாடல்களை இயற்றத் துவங்கினோம். அதன்பொருட்டு, பகவான் ஸ்ரீ ஆதிசங்கரரின் கீதை பாஷ்யம், குருதேவர் ஸ்வாமி சின்மயானந்தரின் கீதைப் பேருரைகள், ஸ்ரீ தபோவனத்தின் வெளியீடான சங்கர பாஷ்ய தமிழாக்கம், கீதா பிரஸ்ஸின் தத்துவ விவேக உரை, ஸ்வாமி சித்பவானந்தரின் கீதை விளக்கம், ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியின் வீடுதோறும் கீதை விளக்க நூல், ஸ்ரீ கிருஷ்ணவாரியரின் சங்கர பாஷ்யம் ஆங்கில உரை,

ஸ்ரீ ஞானேசுவரரின் உரை, , , , , போன்ற பல மகாத்மாக்களின் உரைகளைப் படித்து, அவற்றின் பொருள்களை மனதில் இருத்தி, தமிழ்ப்பாடல்களாய் வெளிக் கொணர்ந்தோம்.

தினமும் ஐந்து ஸ்லோகங்களைத் தமிழ்ப் பாடல்களாக இயற்றி, இறைவனுக்கு ‘கீதை ஸ்லோகங்களை தமிழ்ப் பாமாலை’யாக அர்ப்பணித்து வந்தோம்.

இதில் ஆச்சரியமான விஷயம் என்னவென்றால் “ஸ்ரீகங்காமாதா இமயமலையிலிருந்து சமவெளிக்கு இறங்கி வரும் இடமான **ரிஷிகேசத்தில் துவங்கிய** ஸ்ரீமத் பகவத்கீதையின் அனைத்து ஸ்லோகங்களையும் [701] தமிழில் இயற்றுவது என்ற இவ்வாத்ம சாதனை நிறைவு பெற்ற இடம் **உடுப்பி ஸ்ரீகிருஷ்ணர் சன்னிதி**யாக அமைந்தது” என்பதுதான்.

முதற்கண், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவிற்கும், பூஜ்ய குருதேவ் ஸ்வாமி சின்மயானந்த மகராஜ் அவர்களுக்கும், பூஜ்யகுருஜி ஸ்வாமி தேஜோமயானந்தா அவர்களுக்கும் இத்தமிழ்ப் பாடல்களை அர்ப்பணிக்கின்றோம்.

இக்கீதையைப் படித்தும், புரிந்து கொண்டும், அதன்படி வாழவும் வழிகாட்டியருளிய ஆச்சார்யர் ஸ்வாமி வாகீஶானந்த ஸரஸ்வதி அவர்களின் திருப்பாதங்களில் இக்கீதை தமிழ்ப்பாமாலையை சமர்ப்பிக்கின்றோம்.

ஆச்சார்யரின் வழிகாட்டுதலாகிய, “நீ ஸ்ரீமத் பகவத்கீதையை எடுத்து நன்றாக வாழ்நாள் சாதனை நூலாகப் பயில்” என்ற அறிவுரையானது, இவ்வாறு தமிழ்ப்பாடல்களாய்த் தோன்றியது கண்டு திருப்தியும் மகிழ்ச்சியும் அடைகின்றோம்.

இத்தமிழ்ப் பாடல்களைக் கணினியில் முழுமையாகத் தட்டச்சு செய்து பலமுறை திருத்தங்களையும் சீரமைப்புகளையும் பெருமுயற்சியோடு செய்து உதவிய **முனைவர் திரு. கி. பாலசந்திரன்** சென்னை, அவர்களுக்கு மனமார்ந்த நன்றிகளையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

எவ்விதப் பிரதிபலனையும் எதிர்பாராது, சிரத்தையுடன் இப்பணியைச் செவ்வனே செய்த அவருக்கு இறைவன் நல்ஆரோக்கியத்தையும், ஆத்மஞானத்தையும் பூரணமாய் அருளப் பிரார்த்திக்கின்றோம்.

இத்தமிழ்ப்பாடல்களில் எழுத்துப்பிழை, இலக்கணப்பிழை முதலிய பல பிழைகளையும் திருத்தம் செய்த சேலம் **பண்டிதர், புலவர் ஸ்ரீ கிருஷ்ண சர்மா** அவர்களுக்கு ஆத்மார்த்தமாக நன்றி நவில்வதைத் தவிர என்ன கைம்மாறு செய்வோம். அவருக்கு இறைவன் நல்ஆரோக்கியத்தையும், ஆத்மஞானத்தையும் பூரணமாய் அருளப் பிரார்த்திக்கின்றோம்.

கணினியில் பதிவேற்றம் செய்திருந்தாலும், கொரோனா காரணமாக இரண்டு வருட காலமாக புத்தகமாக அச்சிட்டு வெளிக்கொணர இயலவில்லை. தற்சமயம், இறையருளாலும், குருவருளாலும், நல்லன்பர்களின் உதவியுடன் ‘இ-புத்தக’மாக வெளியிடப்படுகிறது.

இப்பாடல்களைக் கணினியில் நூலாக வடிவமைத்து, ‘இ-புத்தக’மாக வெளிக்கொணர்வதற்கு முழு ஈடுபாட்டுடன் பணியாற்றிய **திருவாளர்கள் மணவழகன் மற்றும் வெங்கடாத்ரி** ஆகிய இருவருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களுக்கும், அவர்கள் குடும்பத்தினருக்கும் நல்ஆரோக்கியத்தையும், வளமையையும் அருளிட இறைவனிடம் பிரார்த்திக்கின்றோம்.

இந்நூலை இயன்றவரை பிழையில்லாமல் வெளிக்கொணர முயன்றுள்ளோம். இந்நூலைப் படித்துப் பயில்பவர்கள் பிழைகளைக் கண்டால், அதை omsivakbc@yahoo.co.in என்ற மின்னஞ்சலுக்கு [இ-மெயில்] அனுப்ப வேண்டுமாய், பணிவுடன் விண்ணப்பிக்கின்றோம்.

**சுபம். ஹரி ஓம்!**

**ஓம் நமோ நாராயணாய.**

**சகடபுரம்**

**01-01-2023**

.

# பாயிரம்

## ஹரி ஓம்

ஸ்ரீ கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி அவர்களின் செய்யுள் வடிவில் மொழி பெயர்த்தமைக்கப்பட்ட "ஸ்ரீமத் பகவத்கீதை" என்னும் பெருநூலுக்கு அன்னாரின் மெய்யொழுக்க மாணாக்கன் சேலம் கிருஷ்ணசர்மா அளித்த பாயிரம்.

" வையம் துலங்கி வளமுறத் தோன்றச்
செய்யும் திறமிது வெனக்கை யற்ற
தனஞ்சயன் தனக்கு மாயவன் நவிற்றிய
குணமிகு கீதைப் பொருண்மை யதனை
அவனிவாழ் தமிழர் அகங்கொண்டு தெளியக்
கவனமார் தமிழ்ப்பா தகவுற யாத்துத்
தந்தனர் கிருட்டிணாத் துமாநந்த சரசுவதி
செந்தமிழ் வடமொழி மெய்ப்பொருள் வல்லோர்
ஸ்ரீமத் பகவத் கீதை எனும்பெயர்
மாட்டெறிந் தியற்றிய பனுவற் றிறத்தொடு
பிறவிச் சுழல் தனை வீட்டுந்
திறங்கொளுத் தினராற் சின்மயற் றொழுதே "

# அணிந்துரை

ஸ்ரீமத் பகவத்கீதையை இத்தமிழ்ப்பாடல்களாய் வெளிக் கொணர்ந்துள்ள ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி அவர்கள், **1997-ம்** வருடம் கோவை சாயிபாபா காலனியிலமைந்த ஒரு பள்ளியில் "கீதையைத் தொடர் வகுப்புகளாக" இருமாதங்களுக்கு "ஒரு வாரம் - ஒரு அத்தியாயம்" என்ற முறையில் போதித்து வந்தார். அதில் கலந்துகொண்டு கீதையை முறையாகக் கற்கவும், பின்னர் அவரின் மாணாக்கனாக ஆகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அச்சமயத்திலிருந்து அவர் எனக்கு வழிகாட்டி வருகின்றார்.

ஒருமுறை அவர் மே **2015-ல்,** தொலைபேசியில் அழைத்து குருதேவர் ஸ்வாமி சின்மயனந்தர் அவர்களின் நூற்றாண்டு [1916-2016] விழாக் கொண்டாட்டத்தின் அங்கமாக சேலத்தில், "**இல்லந்தோறும் கீதை**" என்ற மகாஞான வேள்வியில், ஸ்ரீமத் பகவத்கீதையை தமிழில், சின்மய இயக்கத்தைச் சேர்ந்த இருபதுக்கும் மேற்பட்ட ஆச்சார்யர்களின் துணைகொண்டு தினந்தோறும் ஒரு இல்லத்தில் இரு பாடல்கள் என 365 இல்லங்களில் விளக்க இருப்பதாகவும், அதைக் குறுந்தகட்டில் பதிவுசெய்ததைக் கேட்டுவிட்டு, இரு ஶ்லோகத்திற்கு ஒரு பக்கம் என்ற அளவில் தொகுத்துத் தருமாறும் பணித்தது எனக்குப் பேராச்சர்யத்தையும், மகிழ்ச்சியையும் தந்தது.

### வாழ்நாள் சாதனை

நூலாகத் தொகுக்க வேண்டுமென்றால் அதைப்பற்றிய அறிவும் இருந்தாக வேண்டுமென்பதால், 20 ஆசார்யர்களும் நாள்தோறும் கூறிய கீதைக் கருத்துக்களை சற்றுஆழமாக ஆராயத் துவங்கினேன். இது எனது வாழ்நாள் சாத்னையாக அமைந்தது. இவ்வாறுதான், நான் என் ஆன்மீகச்சாதனைப் பணியை அவர் அனுக்கிரகத்தால் துவக்கினேன். இச்சிறுபணி ஜுன் 2016-ல் முடிந்து, அது **நூற்றாண்டு விழா மலராகச்** சின்மய மிஷன், சேலம் மையத்தால் வெளியிடப்பட்டது.

தொகுப்புரையை அவரிடம் மாதாமாதம் அனுப்பிவிட்டு இடையிடையில் நேரிலும் சென்று கலந்தாலோசித்து வந்தேன்.

இவ்விழாவின் நிறைவு சமயத்தில், ஒருமுறை ஒவ்வொரு அத்தியாயத்தையும் சுருக்கமாக ஒரு பக்கம் என்ற அளவில் பாடல்களாக இயற்றியளித்தால் சாதகர்களுக்குப் பயனுள்ளதாக அமையும் என்று பேசினோம். உடனே அன்றிரவே அவரும் கவிதை நடையில் சொல்லச் சொல்ல, நான் அதை எழுதினேன். பின்னர், அதுவே "**ஞானச்சிதறல்**" என்ற சிறுநூலாக அந்நூற்றாண்டு விழாவில் வெளியிடப்பட்டது. அதை அவர் சுமார் ஆறு மணி நேரத்திற்குள் இயற்றினார் என்பது மிக்க ஆச்சர்யமான விஷயம்.

இவ்வாறு "ஞானச்சிதறல்" வெளிவந்த பிறகு, "இதை ஏன் விரிவாக்கி கீதையின் **அனைத்துச் ஸ்லோகங்களையும் தமிழில் பாடல்களாக இயற்றக்கூடாது?**" என்ற எண்ணம் அவரிடம் எழுந்தது. அதன்பின், அவர் "தினமும் ஐந்து பாடல்களை இயற்றுவேன்" என்று **2017** நவம்பர் மாதத்தில் சங்கல்பம் செய்துகொண்டு, கீதையின் **ஸம்ஸ்கிருத மூல ஸ்லோகத்தின் ஒவ்வொரு வார்த்தையின் பொருளும் வெளிப்படும் விதத்தில் தமிழ்ப் பாடல்களாக** அமைக்க விரும்பி, கோவையாகவும், அதேசமயம் அழகாகவும் அமைய வேண்டும் என்று பகவான் ஸ்ரீகிருஷ்ணரை வேண்டித் தமிழ்ப்பாடல்களாக இயற்றத் துவங்கினார். அதை அவ்வப்பொழுது அவர் எனக்குக் கைபேசி மூலம் பகிர, நான் கணினியில் தட்டெழுத்து செய்து வந்தேன். **இவ்வாறுதான், இந்த ஸ்ரீமத் பகவத்கீதையின் 701 ஸ்லோகங்களும் தமிழ்ப்பாடல்களாக ஒரு வருடத்தில் உருப்பெற்றது**. அவரின் இச்சங்கல்பம் இன்று ஓர் புத்தகமாக உருவெடுத்தது, ஆன்மீக சாதனையாளர்களுக்குக் கிடைத்த மிகப்பெரிய வரப்பிரசாதம் என்று கருதுகிறேன்.

## நூலின் சிறப்பு அம்சம்

இந்நூலின் சிறப்பு அம்சங்களாக நான் கருதுவதை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்:

- இக்கீதையின் தமிழ்ப்பாடல்கள் ஆதிசங்கரர் எழுதிய கீதை பாஷ்யத்தின் கருத்துக்களை முழுமையாகப் பிரதிபலித்-திருப்பது ஓர் விசேஷம்.
- ஸ்ரீமத் பகவத்கீதையின் ஸம்ஸ்கிருத மூலப்பாடலின் கருத்துக்கள் தமிழ்ப்பாடல்களாய் மிக அழகாகவும்-ஆழமாகவும், அதே சமயம் மிகவும் எளிய தமிழ் நடையுடன் கூடியதாகவும் அமைந்திருப்பது மிகவும் சிறப்பான அம்சம்.
- ஒருவர் மூல ஶ்லோகத்தை ஸம்ஸ்கிருதத்தில் படித்திராவிட்டாலும், இத்தமிழ்ப்பாடல்களை மட்டும் படித்தாலே, மூல ஶ்லோகங்களின் கருத்துக்களை நிச்சயம் தெளிவாக அறிந்து கொள்ளவும், புரிந்து கொள்ளவும் இயலும் என்றால் அது மிகையாகாது.
- பொதுவாக [பாதிக்குமேல்] இத்தமிழ்ப்பாடல்களின் அர்த்தங்கள் மூல ஸம்ஸ்கிருத ஶ்லோகங்களின் அர்த்தங்களோடு வரிக்குவரி இயல்பாகப் பொருந்தி யிருப்பது ஓர் பேராச்சர்யம். இது நிச்சயம் இறையருள் - குருஅருளால் தான் நிகழ்ந்திருக்க வேண்டும்.

  உதாரணத்திற்கு, ஒரு சில பாடல்களை முன் வைக்கிறேன்:

### அத்,01-30

| | |
|---|---|
| காண்டீவம் கையினின்றும் நழுவுகிறதே | गाण्डीवं स्रंसते हस्ता |
| சர்மமெல்லாம் பற்றி எரிகின்றதே \| | त्वक्चैव परिदह्यते । |
| நிற்பதற்கும் சக்தி யற்றவனானேனே | न च शक्नोम्यवस्थातुं |
| என்மனம் குழம்புவது போலுள்ளதே \|\| | भ्रमतीव च मे मनः ॥ |

**அத்,05-02**

| | |
|---|---|
| செயலைத் துறத்தலும் செயல்யோகமும் | संन्यासः कर्मयोगश्च |
| இவ்விரண்டும் மேன்மையை அளிப்பவையே। | निःश्रेयसकरावुभौ । |
| ஆனாலவை களில்செயலைத் துறத்தலினும | तयोस्तु कर्मसंन्यासात् |
| செயலைச் செய்த லென்பதுமேலானதே ॥ | कर्मयोगो विशिष्यते॥ |

**அத்.12-12**

| | |
|---|---|
| பயிற்சியோகத் தினுமறிவு மிகவுயர்ந்தது | श्रेयो हि ज्ञानमभ्यासात |
| அறிவைவிடத் தியானம் உயர்ந்ததாகிறது। | ज्ञानाद्ध्यानं विशिष्यते । |
| தியானத்தைவிட மேலாம்கர்ம பலத்தியாகம் | ध्यानात्कर्मफलत्याग: |
| தியாகத்தினின் றுவிரைவில மைதிதோன்றுமே ॥ | गाच्छान्तिरनन्तरम ॥ |

**அத்,18-66**

| | |
|---|---|
| எல்லாதர்மத் தையும்நன்றாய்த் துறந்தும் | सर्वधर्मान्परित्यज्य |
| என்னொருவனி டத்திலேயேஅடைக்கலமாவாய்। | मामेकं शरणं व्रज । |
| எல்லாப்பாவங் களிலிருந்தும் உனைநான் | अहं त्वा सर्वपापेभ्य: |
| விடுவிப்பேன் நீவருத்தப்பட வேண்டாம் ॥ | मोक्षयिष्यामि मा शुचः ॥ |

எஞ்சியுள்ள தழிழ்ப்பாடல்களின் அர்த்தங்களும் மூலஶ்லோகங்-களின் அர்த்தங்களோடு பொதுவாக [பாதிக்குமேல்] இருவரிக்கு இருவரி என பொருந்தியிருப்பபதைக் காணலாம்.

- ஒவ்வொரு பாடலும் ஸம்ஸ்கிருத மூல ஶ்லோகத்தின் நடையின் சுருதியிலேயே அமைந்து விட்டதும் விந்தை.

- தமிழ்ப்பாடலில் ஏதேனும் ஓர் சொல்லிற்கு பல அர்த்தங்கள் கொள்ள சாத்தியமாயிருக்கும் பொழுதோ [அ] எந்த ஸம்ஸ்கிருத மூலச்சொல்லிற்காக அத்தமிழ்வார்த்தை உபயோகிக்கப்பட்டுள்ளது என்பதை தெளிவுபடுத்தவோ, பல பாடல்களுக்கு அடிக்குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளது மற்றோர் சிறப்பாகும்.

- ஆச்சார்யர் இத்தமிழ்ப்பாடல்களை நாலாயிர திவ்யப்-பிரபந்தத்தின் சுருதியிலும் இசைத்துக் காட்ட, அதுவும் பெரும்பாலோர் உபயோகிக்கும் சுருதியில் அமைந்-திருந்ததும் விந்தை.

இவ்விதம் ஆன்மீகச் சாதனையில் ஆழ்வதற்கும், சிறுபணியாற்றுவதற்கும் வாய்ப்பளித்த ஆச்சார்யர் அவர்களுக்கு என் நன்றியைச் சமர்ப்பிக்கிறேன். இந்நூலைத் தட்டெழுத்துச் செய்தபின், ஆச்சார்ய மற்றும் தமிழ்ப்புலவர் ஸ்ரீ கிருஷ்ணசர்மா, சேலம் ஆகியோரின் துணையுடன் எழுத்து / கருத்துப் பிழைகள் சரி செய்யப்பட்டன.

இந்நூலை வாசிக்கும் அன்பர்களின் பார்வையில் சொற்பிழைகள் / கருத்துப்பிழைகள் / அச்சுப்பிழைகள் தென்படின், omsivakbc@yahoo.co.in என்ற மின்னஞ்சல் [இ-மெயிலுக்கு] அனுப்பிப் புத்தகத்தை மேலும் சீரமைக்க உதவுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

**ஓம் நமசிவாய.** **முனைவர் கி. பாலசந்திரன்**,
சென்னை துணைப் பொதுமேலாளர் (ஓய்வு),
**15-02-2023** **இந்தியன் வங்கி**

# ஸ்ரீமத் பகவத்கீதை

## அமைதியும் ஆனந்தமும்

## பாகம்-1 - ஜீவாத்ம விசாரணை

ஓம் நமோ நாராயணாய

ஜய ஜய சத்குரு

## ஓம் ஶ்ரீபரமாத்மனே நம:

# ஶ்ரீமத் பகவத்கீதை
# श्रिमद्भगवद्गीता

## முதல் அத்தியாயம்
## “அர்ஜுனனிடம் துக்கத்தின் வெளிப்பாடு”

**अथ प्रथमोऽध्यायः ।**

**அத² ப்ரத²மோऽத்⁴யாய: ।**

**अर्जुनविषादयोगः**

**அர்ஜுநவிஷாத³யோக³ :**

# ஹரி: ஓம்!



**அர்ஜுனன் புகன்றான்**

ஓஅச்சுதா! இவ்விரு சேனையிடையே
எம்தேரை எதிர்நிறுத்து வீரே ||
என்னுடன் போர்விரும்பி நிற்கும் |
இக்கூட்டம் தனைநான் காணவே || [ ப.கீ. 01. 21 ]

**அத்தியாயம் : 01 பாடல் : 01**

**"திருதராஷ்டிரன் புகன்றான்"**

தர்ம பூமியாம் குருபூமியில்
ஒன்று கூடியுத்தம் விரும்பியே ।
என்ன வர்களும் அவ்வைவரும்
என் செய்தனர் ஸஞ்ஜயா ॥

**धृतराष्ट्र उवाच ।**
**த்$^{4}$ரு'தராஷ்ட்ர உவாச ।**
धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
த$^{4}$ர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥
மாமகா: பாண்ட$^{3}$வாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥

**அத்தியாயம் : 01 பாடல்: 02**

**"சஞ்ஜயன் புகன்றான்"**

ராஜா துரியோதனன் அச்சமயம்
ஐவர்படை அணிவகுப்புக் கண்டதும் ।
ஆச்சார்யர் துரோணரையே அணுகி
வாய்மொழிந் தானிவ்வார்த் தையினை ॥

**सञ्जय उवाच ।**
**ஸஞ்ஜய உவாச ।**
दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
த்$^{3}$ரு'ஷ்ட்வா து பாண்ட$^{3}$வாநீகம் வ்யூட$^{4}$ம் து$^{3}$ர்யோத$^{4}$நஸ்ததா$^{3}$ ।
आचार्यमुपसङ्गम्य राजा वचनमब्रवीत् ॥
ஆசார்யமுபஸங்க$^{3}$ம்ய ராஜா வசநமப்$^{3}$ரவீத் ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 03**

ஆச்சார்யரே! உம்புத்திமான் சிஷ்யன்;
துருபதன் மகன்த்ருஷ்டத் யும்னன் ।
அணிவகுத்த பாண்டுபுத்தி ரர்கள்தம்
மாபெரும் சேனையைப் பாரும் ॥

**पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।**
பஶ்யைதாம் பாண்டு[3]புத்ராணாமாசார்ய மஹதீம் சமூம் ।
**व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥**
வ்யூடா[4]ம் த்[3]ருபத[3]புத்ரேண தவ ஶிஷ்யேண தீ[4]மதா ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 04**

காணீர்!இப் படைசூரர் வில்லாளிகள்
பீமார்ஜுன னுக்குச்சம மாமவர் ।
போரில் சாத்யகியாம் யுயுதானனும்
விராடதேசத் தரசன் துருபதனுமாம் ॥

**अत्रशूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।**
அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீ[4]மார்ஜுநஸமா யுதி[4] ।
**युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥**
யுயுதா[4]நோ விராடஶ்ச த்[3]ருபத[3]ஶ்ச மஹாரத[2]: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 05**

த்ருஷ்டகேது வும்சேகிதா னனும்
வீர்யவான் காசி ராஜனும் |
புருஜித்தும் குந்தி போஜனும்
மாமனிதன் சைப்யனிருப் பதும்காணீர் ||

**धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।**
த்$^4$ரு'ஷ்டகேதுஶ்சேகிதாந: காஶிராஜஶ்ச வீர்யவாந் |
**पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥**
புருஜித்குந்திபோ$^4$ஜஶ்ச ஶைப்$^3$யஶ்ச நரபுங்க$^3$வ: ||

**அத்தியாயம் : 01 பாடல் : 06**

பேராற்றல் பெற்ற யுதாமன்யுவும்
வல்லமையுடை உத்த மௌஜஸும் |
சுபத்ரையின் மகன் அபிமன்யுவும்
திரௌபதியின் ஐம்புதல்வரும் மஹாரதர்களே ||

**युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।**
யுதா$^4$மந்யுஶ்ச விக்ராந்த உத்தமௌஜாஶ்ச வீர்யவாந் ।
**सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥**
ஸௌப$^4$த்$^3$ரோ த்$^3$ரௌபதே$^3$யாஶ்ச ஸர்வ ஏவ மஹாரதா$^2$: ||

**அத்தியாயம் : 01 பாடல் : 07**

அந்தணோத்தமரே! நம்மில் சிறந்தோ-
ரவர்களையும் நீரறிந்து கொள்ளும் |
என்னுடைய சேனையின் நாயகர்கள்
கூறுகேன் அவர்களை அறியும்பொருட்டே ||

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
அஸ்மாகம் து விஶிஷ்டா யே தாந்நிபோ³த⁴ த்³விஜோத்தம ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த²ம் தாந்ப்³ரவீமி தே ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 08**

தாங்களும் பீஷ்மரும் கர்ணனும்
வெற்றியே வடிவான க்ருபரும் |
அங்ஙனமே அஶ்வத்தாம விகர்ணனும்
ஸோமதத்தன் மகன்பூரிஸ் ரவஶுமுளரே ||

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जयः ।
ப⁴வாந்பீ⁴ஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ரு'பஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥
அஶ்வத்தா²மா விகர்ணஶ்ச ஸௌமத³த்திஸ்ததை²வ ச ॥

அத்தியாயம் : 01 பாடல் : 09

எண்ணிலா ஆயுத மம்புகள்கூடி
பலப்பல சூரர்க ளெல்லாம் |
யுத்தத்தில் சிறந்தே உளர்
என்பொருட்டு உயிர் துறக்கவே ||

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
அந்யே ச ப³ஹவ: ஶூரா மத³ர்தே² த்யக்தஜீவிதா: ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥
நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்³த⁴விஶாரதா³: ॥

அத்தியாயம் : 01 பாடல் : 10

பீஷ்மர் காக்கும் நம்சேனை
அளவில் அடங்காது விரிந்துளது |
பீமனால் காக்கப்படு மச்சேனை
அளவில் அடங்கியே யுள்ளது ||

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
அபர்யாப்தம் தத³ஸ்மாகம் ப³லம் பீ⁴ஷ்மாபி⁴ரக்ஷிதம் ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥
பர்யாப்தம் த்வித³மேதேஷாம் ப³லம் பீ⁴மாபி⁴ரக்ஷிதம் ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 11**

அனைத்துப் படை அணிவகுப்பும்
அவரவர்தம் இடம் நின்றே |
ஒன்றாய் ஓர் உறுதியுடனே
நிச்சயம் காப்பீர் பீஷ்மரையே ||

**अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।**
அயநேஷு ச ஸர்வேஷு யதா²பா⁴க³மவஸ்தி²தா: |
**भीष्ममेवाभिरक्षन्तु भवन्तः सर्व एव हि ॥**
பீ⁴ஷ்மமேவாபி⁴ரக்ஷந்து ப⁴வந்த: ஸர்வ ஏவ ஹி ||

**அத்தியாயம் : 01 பாடல் : 12**

வல்லவன் கௌரவ முதல்வன்
பாட்டன் பீஷ்ம பிதாமகன் |
உற்சாகமூட்டவே [1]அவன் பொருட்டு
உரக்க ஊதினான் சிம்மநாதம்தனை ||

[ 1 துரியோதனன் ]

**तस्य सञ्जनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।**
தஸ்ய ஸஞ்ஜநயந்ஹர்ஷம் குருவ்ரு'த்³த:⁴ பிதாமஹ: ।
**सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥**
ஸிம்ஹநாத³ம் விநத்³யோச்சை: ஶங்க²ம் த³த்⁴மௌ ப்ரதாபவாந் ||

**அத்தியாயம் : 01 பாடல் : 13**

பின்பு தொடர்ந்த பலநாதங்கள்
சங்கு பேரிகை தம்பட்டைகளும் |
பறையுடன் ஒலிமிகுந்த கொம்புகளுமே
ஒருங்கே சேர்ந்து முழங்கினவே ||

**ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।**
தத: ஶங்கா²ஶ்ச பே⁴ர்யஶ்ச பணவாநககோ³முகா²: ।
**सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥**
ஸஹஸைவாப்⁴யஹந்யந்த ஸ ஶப்³த³ஸ்துமுலோऽப⁴வத் ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 14**

பிறகு வெண்குதிரைகளுள்ள மேலாம்தேரில்
வீற்றிருந்த மாதவ அர்ஜுனரும் |
தத்தம் தெய்வீகம்மிகு சங்குகளையே
உடன் எடுத்து உரக்கஊதினரே ||

**ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।**
தத: ஶ்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்த³நே ஸ்தி²தௌ ।
**माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥**
மாத⁴வ: பாண்ட³வஶ்சைவ தி³வ்யௌ ஶங்கௌ² ப்ரத³த்⁴மது: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 15**

ஊதினான் ஹ்ருஷீகேசன் பாஞ்சஜன்யம்
ஊதினான் தனஞ்சயன் தேவதத்தம் |
ஊதினான் [1]பெருவினையாற்றும் பீமசேனன்
ஊதினனே பௌண்ட்ரமஹா சங்கம்தனையே ||

[ 1 வ்ருகோதர = ஓனாய் வயிற்றோன்; பெருவினையாற்றும் திறன் ]

**पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।**
பாஞ்சஜந்யம் ஹ்ரு'ஷீகேஶோ தே[3]வத[3]த்தம் த[4]நஞ்ஜய: ।
**पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥**
பௌண்ட்[3]ரம் த[3]த்[4]மௌ மஹாஶங்க[2]ம் பீ[4]மகர்மா வ்ரு'கோத[3]ர: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 16**

குந்தியின் மகன் தர்மராஜன்
ஊதினனே அநந்தவிஜயம் தனை |
ஊதினரே ஸுகோஷ மணிபுஷ்பகம்தனை
முறையே நகுல சகதேவருமே ||

**अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।**
அநந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதி[4]ஷ்டி[2]ர: ।
**नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥**
நகுல: ஸஹதே[3]வஶ்ச ஸுகோ[4]ஷமணிபுஷ்பகௌ ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 17**

சீர்மிகு வில்லாளி காசிராஜன்
மஹாரதி த்ருஷ்டத்யும்ன சிகண்டியும் |
அங்ஙனமே விராட தேசத்தரசனும்
வெல்லவியலா சாத்யகியு மூதினரே ||

**काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।**
காஶ்யஶ்ச பரமேஷ்வாஸ: ஶிக$^{2}$ண்டீ$^{3}$ ச மஹாரத$^{2}$: ।
**धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥**
த்$^{4}$ரு’ஷ்டத்$^{3}$யும்நோ விராடஶ்ச ஸாத்யகிஶ்சாபராஜித: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 18**

புவியாளும் வேந்தனே! மன்னா!
துருபதனும் த்ரௌபதியின் ஐம்புதல்வரும் |
பெரும்தோளோன் சுபத்ரைமகனும் ஊதினரே
தத்தம் சங்குகளை எப்புறமுமொலிக்கவே ॥

**द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।**
த்$^{3}$ருபதோ$^{3}$ த்$^{3}$ரௌபதே$^{3}$யாஶ்ச ஸர்வஶ: ப்ரு’தி$^{2}$வீபதே ।
**सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक्पृथक् ॥**
ஸௌப$^{4}$த்$^{3}$ரஶ்ச மஹாபா$^{3}$ஹு: ஶங்கா$^{2}$ந்த$^{3}$த்$^{4}$மு: ப்ரு’த$^{2}$க்ப்ரு’த$^{2}$க் ॥

**அத்தியாயம் : 01   பாடல் : 19**

அப்போரொலிப் பெரு முழக்கம்
விண்புவிக்கும் இடை ஒலிக்க |
கௌரவரின் உள்ளம் தன்னில்
சீறிப்புகுந்துப் பிளந்தது காணும் ||

**स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।**
ஸ கோ⁴ஷோ தா⁴ர்தராஷ்ட்ராணாம் ஹ்ரு'த³யாநி வ்யதா³ரயத் ।
**नभश्च पृथिवीं चैव तुमुलोऽभ्यनुनादयन् ॥ or लो व्यनु ॥**
நப⁴ஶ்ச ப்ரு'தி²வீம் சைவ துமுலோऽப்⁴யநுநாத³யந் ॥ or லோ வ்யநு ॥

**அத்தியாயம் : 01   பாடல் : 20 & 21.1/2**

புவியாளும் மன்னா! குரங்குக்கொடியோன்
போர்துவங்கிய தார்த்தராஷ்டிரர் தமைநோக்கி |
அம்புகள் விண்ணிலே பாயுமுன்னே ||
இருஷீகேசரிட மிவ்வார்த்தை தனைப்புகன்றான் |

**अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।**
அத² வ்யவஸ்தி²தாந்த்³ரு'ஷ்ட்வா தா⁴ர்தராஷ்ட்ராந் கபித்⁴வஜ: |
**प्रवृत्ते शस्त्रसम्पाते धनुरुद्यम्य पाण्डवः ॥**
ப்ரவ்ரு'த்தே ஶஸ்த்ரஸம்பாதே த⁴நுருத்³யம்ய பாண்ட³வ: ॥
**हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।**
ஹ்ரு'ஷீகேஶம் ததா³ வாக்யமித³மாஹ மஹீபதே ।

**அத்தியாயம் : 01 பாடல் : 21.2/2 & 22**

**"அர்ஜுனன் புகன்றான்"**
ஓஅச்சுதா! இவ்விரு சேனையிடையே
எம்தேரை எதிர்நிறுத்து வீரே ||
என்னுடன் போர்விரும்பி நிற்கும் |
இக்கூட்டம் தனைநான் காணவே ||

**अर्जुन उवाच ।**
**அர்ஜுந உவாச**
सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥
ஸேநயோருப4யோர்மத்4யே ரத2ம் ஸ்தா2பய மேऽச்யுத ॥
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ।
யாவதே3தாந்நிரீக்ஷேऽஹம் யோத்3து4காமாநவஸ்தி2தாந் ।
कैर्मया सह योद्धव्यमस्मिन् रणसमुद्यमे ॥
கைர்மயா ஸஹ யோத்3த4வ்யமஸ்மிந் ரணஸமுத்3யமே ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 23**

இவ்விதம் துஷ்டபுத்தி யுடன்நிற்கும்
அந்தகன் மகன் துரியோதனன்தம் |
பிரியம் விரும்பியுளோர் தமையும்
களம் புகுந்தோரையும் காணவே ||

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
யோத்ஸ்யமாநாநவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாக3தா: ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥
தா4ர்தராஷ்ட்ரஸ்ய து3ர்பு3த்3தே4ர்யுத்3தே4 ப்ரியசிகீர்ஷவ: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 24**

**"சஞ்ஜயன் புகன்றான்"**

பரத குலத்தோன்றலே! த்ருதராஷ்டிரரே!
இவ்விதம்பகர் குடாகேசன் சொல்கேட்ட |
ஹ்ருஷீகேசர் உத்தமமாம் தேரை
இருசேனைக் கிடை நிறுத்தியே.... ||

**सञ्जय उवाच ।**

**ஸஞ்ஜய உவாச ।**

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
ஏவமுக்தோ ஹ்ரு'ஷீகேஶோ கு³டா³கேஶேந பா⁴ரத ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥
ஸேநயோருப⁴யோர்மத்⁴யே ஸ்தா²பயித்வா ரதோ²த்தமம் ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 25**

வழிநடாத்தும் பீஷ்மரும் த்ரோணரும்
மற்றுமுள வேந்தர்களின் முன்னிருத்தியே |
ஒருங்கேகூடியுள்ள இக்கௌரவர் தமைப்-
பார்த்தனே! "தீர்க்கமாய்க் காண்"என்றார் ||

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
பீ⁴ஷ்மத்³ரோணப்ரமுக²த: ஸர்வேஷாம் ச மஹீக்ஷிதாம் ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥
உவாச பார்த² பஶ்யைதாந்ஸமவேதாந்குரூநிதி ॥

**அத்தியாயம் : 01   பாடல் : 26**

பார்த்தன்! பார்த்தானிரு சேனையினரை
பாட்டன்- ஆச்சார்யர்- அம்மான்களையும் ।
சகோதர புத்திர பேரர்களையும்
அவ்விதமே அனைத்துத் தோழர்களையும்... ||

**तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।**
தத்ராபஶ்யத்ஸ்தி$^{2}$தாந்பார்த:$^{2}$ பித்ரூ′நத$^{2}$ பிதாமஹாந் ।
**आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥**
ஆசார்யாந்மாதுலாந்ப்$^{4}$ராத்ரூ′ந்புத்ராந்பௌத்ராந்ஸகீ$^{2}$ம்ஸ்ததா$^{2}$ ॥

**அத்தியாயம் : 01   பாடல் : 27 & 28.1/2**

மாமனார்கள், நல்உள்ள முள்ளோரையும்
ஒன்றுகூடி நிற்கு முறவுகளையும் |
உற்றுநோக்கி உள்ளம் வருந்தியே
மிகுவிரக்கமுடன் குந்திமகன் கூறினானே ॥

**श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।**
ஶ்வஶுராந்ஸுஹ்ரு′த$^{3}$ஶ்சைவ ஸேநயோருப$^{4}$யோரபி ।
**तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥**
தாந்ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந்ப$^{3}$ந்தூ$^{4}$நவஸ்தி$^{2}$தாந் ॥
**कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।**
க்ரு′பயா பரயாவிஷ்டோ விஷீத$^{3}$ந்நித$^{3}$மப்$^{3}$ரவீத்

**அத்தியாயம் : 01 பாடல் : 28.2/2 & 29**

**"அர்ஜுனன் புகன்றான்"**
ஓகிருஷ்ணா வென்றே கூவி! |
யுத்தம் விரும்பிக்களம் புகுந்துநிற்கும்
உறவுகளை யான்உற்று நோக்கிடில் |
அங்கமெலாம் தளர்ந்து நாவறள்கின்றதே
உடல்நடுங் கிமயிர்க்கூச் செறிகின்றதே ||

**अर्जुन उवाच ।**
**அர்ஜுந உவாச ।**
दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥
த்[3]ரு'ஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ரு'ஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்தி[2]தம் ॥
सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
ஸீத[3]ந்தி மம கா[3]த்ராணி முக[2]ம் ச பரிஶுஷ்யதி ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥
வேபது[2]ஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 30**

காண்டீவம் கையினின்றும் நழுவுகிறதே
[1]சர்மமெல்லாம் பற்றி எரிகின்றதே |
நிற்பதற்கும் சக்தி யற்றவனானேனே
என்மனம் குழம்புவது போலுள்ளதே ||

[ 1 சர்மம் – த்வக் - உடலின் மேல்தோல் ]

गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
கா[3]ண்டீ[3]வம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத்த்வக்சைவ பரித[3]ஹ்யதே ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥
ந ச ஶக்நோம்யவஸ்தா[2]தும் ப்[4]ரமதீவ ச மே மந: ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 31**

ஓகேசவா! கெடுதல்கள் அளிக்கும்
சகுனங்க ளனைத்தும் காண்கின்றேன் |
உறவினர்தமை நாம் கொல்லுவதால்
மேன்மை ஏதும் காண்கிறேனில்லை ||

**निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।**
நிமித்தாநி ச பஶ்யாமி விபரீதாநி கேஶவ ।
**न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥**
ந ச ஶ்ரேயோऽநுபஶ்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 32**

ஹேகிருஷ்ணா! வெற்றியையும் விரும்பவில்லை
ராஜ்யம் தனையும் விரும்பவில்லை |
சுகங்களையும் யான் விரும்பவில்லை
கோவிந்தா! ராஜபோகத்தால் நமக்கென்பயன்? ||

**न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।**
ந காங்க்ஷே விஜயம் க்ரு'ஷ்ண ந ச ராஜ்யம் ஸுகா²நி ச ।
**किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥**
கிம் நோ ராஜ்யேந கோ³விந்த³ கிம் போ⁴கை³ர்ஜீவிதேந வா ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 33**

யாவர்க்காக நாம் சுகபோகங்களை
வேண்டி விரும்பத் தக்கதாயிற்றோ |
அவர்களோ செல்வமுயிராசை யும்துறந்து
போர்க்களத் தில்கூடிநிற்கக் காணீர் ||

**येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानि च ।**

யேஷாமர்தே2 காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போ4கா:3 ஸுகா2நி ச ।

**त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥**

த இமேऽவஸ்தி2தா யுத்3தே4 ப்ராணாம்ஸ்த்யக்த்வா த4நாநி ச ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 34**

அனைத்து ஆசார்யர்களும் தந்தைதனயரும்
அவ்வாறே பாட்டன் அம்மான்மார்களும் |
மைத்துன மாமனார்களும் பேரன்களனைவரும்
உறவினருடன் கூடி யிருக்கக்காணீர் ||

**आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।**

ஆசார்யா: பிதர: புத்ராஸ்ததை2வ ச பிதாமஹா: ।

**मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः सम्बन्धिनस्तथा ॥**

மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா: ஶ்யாலா: ஸம்ப3ந்தி4நஸ்ததா2 ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 35**

ஓமதுசூதனா! என்னைக் கொன்றாலும்
மூவுலக ராஜ்யத்தின் ஆசையாலும் |
கொல்லேன் இவர்களை நானொருபொழுதும்;
கொல்வேனோ இப்புவியின் பொருட்டு ||

**एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।**
ஏதாந்ந ஹந்துமிச்சா²மி க்⁴நதோऽபி மது⁴ஸூத³ந ।
**अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥**
அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ரு'தே ॥

**அத்தியாயம் : 01 பாடல் : 36**

**ஓஜனார்தனா!**

திருதாஷ்டிர மைந்தர்கள்தம் உயிர்-
நீக்கினால் மகிழ்ச்சியுண்டோ நமக்கு |
இப்[1]பஞ்சமா பாதகர்தமைக் கொன்றால்
பாவம் அன்றோ நமைச்சாரும் ||

[ 1 ஆததாயிந = பஞ்சமகாபாதகர் ]

**निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।**
நிஹத்ய தா⁴ர்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்த³ந |
**पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥**
பாபமேவாஶ்ரயேத³ஸ்மாந்ஹத்வைதாநாததாயிந: ||

**அத்தியாயம் : 01 பாடல் : 37**

ஆம்! நம்உறவினர் துரியோதனாதிகளை
நாம் கொல்லுதல் தக்கதன்றே |
ஓமாதவா! உறவினர்க ளுயிர்போக்கி
சுகத்தை யெப்படிக் காண்போம் ||

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान्स्वबान्धवान् ।
தஸ்மாந்நார்ஹா வயம் ஹந்தும் தா[4]ர்தராஷ்ட்ராந்ஸ்வபா[3]ந்த[4]வாந் |
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥
ஸ்வஜநம் ஹி கத[2]ம் ஹத்வா ஸுகி[2]ந: ஸ்யாம மாத[4]வ ||

**அத்தியாயம் : 01 பாடல் : 38**

பேராசையால் கவர்ந்த இவர்மனம்
குலநாச தோஷத்தை யறியுமோ? |
மித்ரத்ரோக பாவம்தனை உணருமோ
அவர்கள் தீமையை யுணராவிடினும்.... ||

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
யத்[3]யப்யேதே ந பஶ்யந்தி லோபோ[4]பஹதசேதஸ: |
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥
குலக்ஷயக்ரு'தம் தோ[3]ஷம் மித்ரத்[3]ரோஹே ச பாதகம் ||

**அத்தியாயம் : 01  பாடல் : 39**

ஓஜனார்தனா! குலநாச தோஷங்களைத்
தெளிவுற நன்றாயறியும் நாம் |
இப்பாவச்செயல் விடுத்து விலகிட
ஏன் முயலுதல் செ(ய்)யக்கூடாது? ||

**कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।**
கத$^{2}$ம் ந ஜ்ஞேயமஸ்மாபி:$^{4}$ பாபாத$^{3}$ஸ்மாந்நிவர்திதும் |
**कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥**
குலக்ஷயக்ரு'தம் தோ$^{3}$ஷம் ப்ரபஶ்யத்$^{3}$பி$^{4}$ர்ஜநார்த$^{3}$ந ||

**அத்தியாயம் : 01  பாடல் : 40**

குலநஷ்ட மெய்திடில் என்றுமுள
குலதர்மங்கள் அழிவது திண்ணம் |
தர்மம் அழிந்தால் குலமனைத்திலும-
தர்மம் வெகுவாய்ப் பரவுமே ||

**कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।**
குலக்ஷயே ப்ரணஶ்யந்தி குலத$^{4}$ர்மா: ஸநாதநா: |
**धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥**
த$^{4}$ர்மே நஷ்டே குலம் க்ரு'த்ஸ்நமத$^{4}$ர்மோऽபி$^{4}$ப$^{4}$வத்யுத ||

**அத்தியாயம் : 01 பாடல் : 41**

கிருஷ்ணா! அதர்மம் மிகப்பெருகிடில்
குலப்பெண்கள் நன்னலம் இழப்பர் |
பெண்கள் அந்நலம் இழக்கில்
வர்ணக்கலப்பும் தோன்றும் வ்ருஷ்ணிகுலத்தோனே! ||

**अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।**
அத⁴ர்மாபி⁴ப⁴வாத்க்ருʼஷ்ண ப்ரது³ஷ்யந்தி குலஸ்த்ரிய: |
**स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥**
ஸ்த்ரீஷு து³ஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கர: ||

**அத்தியாயம்: 01 பாடல்: 42**

குலநாசகரு மவர் குலமும்
வர்ணக்கலப்பால் நரகம் அடைவரே |
இவர்முன்னோர் பிண்டநீர்க் கடனற்றே
நிச்சயம் வீழ்ச்சி அடைவார்களே ||

**सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।**
ஸங்கரோ நரகாயைவ குலக்⁴நாநாம் குலஸ்ய ச |
**पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रियाः ॥**
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோ³த³கக்ரியா: ||

**அத்தியாயம் : 01   பாடல் : 43**

குலநாசகர் செயும் இவ்வர்ணக்கலப்பு
எனுமிந்த தோஷங்களா லென்றும் |
சாச்வத ஜாதி குலதர்மங்களும்
நிச்சயம் அழிவில் அழுந்துமே ||

**दोषैरेतैः कुलघ्नानां वर्णसङ्करकारकैः ।**
தோ$^3$ஷைரேதை: குலக்$^4$நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।
**उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥**
உத்ஸாத்$^3$யந்தே ஜாதித$^4$ர்மா: குலத$^4$ர்மாஶ்ச ஶாஶ்வதா: ॥

**அத்தியாயம் : 01   பாடல் : 44**

ஜனார்தனா! குலதர்மத்தை யிழந்த
மனிதர்கள் தாம் நரகத்தில் |
நெடிது வாழும் நிலையடைவர்
என்று கேட்டிருக்கிறோம் நாம் ||

**उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।**
உத்ஸந்நகுலத$^4$ர்மாணாம் மநுஷ்யாணாம் ஜநார்த$^3$ந |
**नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ or नरकेऽनियतं**
நரகே நியதம் வாஸோ ப$^4$வதீத்யநுஶுஶ்ரும || or நரகேऽநியதம்

**அத்தியாயம் : 01 பாடல் : 45**

அந்தோ பெரும்பாவம் செய
விழைந்தோம் அன்றோ நாமே |
ராஜீயசுக ஆசையாலே கொல்லவே
முனைந்தோமோ உறவினர் கள்தமையே ||

**अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।**
அஹோ ப$^{3}$த மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் |
**यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यताः ॥**
யத்$^{3}$ராஜ்யஸுக$^{2}$லோபே$^{4}$ந ஹந்தும் ஸ்வஜநமுத்$^{3}$யதா: ||

**அத்தியாயம் : 01 பாடல் : 46**

ஆயுதமின்றி எதிர்த்துப்போரிடா எனை
ஆயுதம் தாங்கியே துரியோதனாதிகள் |
இப்போர்க் களத்தில் கொன்றாலும்
அதுவெனக்கு நன்மை பயப்பதாகுமே ||

**यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।**
யதி$^{3}$ மாமப்ரதீகாரமஶஸ்த்ரம் ஶஸ்த்ரபாணய: |
**धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥**
தா$^{4}$ர்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ்தந்மே க்ஷேமதரம் ப$^{4}$வேத் ||

**அத்தியாயம் : 01 பாடல் : 47**

**'சஞ்ஜயன் புகன்றான்'**

சோகம்தாக்கிய மனதுடை அர்ஜுனன்
போர்க்களத்தி லிவ்விதம் பகன்றே |
வில்லம்பு களைக்கீழ் எறிந்தே
தேர்த் தட்டில் அமர்ந்தனனே ||

**सञ्जय उवाच ।**

**ஸஞ்ஜய உவாச ।**

एवमुक्त्वार्जुनः सङ्ख्ये रथोपस्थ उपाविशत् ।
ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்$^{2}$யே ரதோ$^{2}$பஸ்த$^{2}$ உபாவிஶத் |
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥
விஸ்ரு'ஜ்ய ஸஶரம் சாபம் ஶோகஸம்விக்$^{3}$நமாநஸ: ||





## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## “அர்ஜுனனிடம் துக்கத்தின் வெளிப்பாடு”

எனும் இம்முதலாம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

**ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु**
ஓம் தத்ஸதி$^{3}$தி ஸ்ரீமத்$^{3}$ப$^{4}$க$^{3}$வத்$^{3}$கீ$^{3}$தாஸூபநிஷத்ஸு

**ब्रह्मविद्यायां योगशास्त्रे**
ப்$^{3}$ரஹ்மவித்$^{3}$யாயாம் யோக$^{3}$ஶாஸ்த்ரே

**श्रीकृष्णार्जुनसंवादे**
ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே$^{3}$

**अर्जुनविषादयोगो नाम**
அர்ஜுநவிஷாத$^{3}$யோகோ$^{3}$ நாம

**प्रथमोऽध्यायः ॥**
ப்ரத$^{2}$மோSத்$^{4}$யாய: ॥

## ஓம் ஶ்ரீபரமாத்மனே நம:

# ஶ்ரீமத் பகவத்கீதை
# श्रिमद्भगवद्गीता

## இரண்டாம் அத்தியாயம்
## “தத்துவ ஞானத்தைப் பெறுதல்”

अथ द्वितीयोऽध्यायः ।
அத² த்³விதீயோऽத்⁴யாய: ।

साङ्ख्ययोगः
ஸாங்க்²யயோக³: ।

# ஹரி: ஓம்!



கோழைத்தன மோங்கி சீரழிந்தமன முடையோனாகி தர்மத்தில்
குழம்பிய மனதால் தங்களிடம் வினவுகின்றேன் ஏதெனக்கு ।
நிலையான மேன்மையளித்திடுமோஅதைப் புகல்வீர்; உம்சீடன் நான்
எனக்கு பதேசித்துக் காப்பீர், தங்களை சரணடைகின்றேனே ॥

[ ப.கீ. 02. 07 ]

**அத்தியாயம்: 02 பாடல்: 01**

**"சஞ்ஜயன் புகன்றான்"** ।
இவ்வித மிரக்கம் மேலோங்கி
கண்களில் கண்ணீர் ததும்பிவழிய ।
சோகமே வடிவான அர்ஜுனனிடம்
மதுசூதனன் இவ்வார்த்தைதனைப் பகர்ந்தனனே ॥

**सञ्जय उवाच ।**
**ஸஞ்ஜய உவாச**
तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
தம் ததா² க்ரு'பயாவிஷ்டமஶ்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥
விஷீத³ந்தமித³ம் வாக்யமுவாச மது⁴ஸூத³ந: ॥

**அத்தியாயம்: 02 பாடல்: 02**

**"ஸ்ரீபகவான் பகர்ந்தார்"**
ஹேஅர்ஜுனா! தகாத சமயந்தனில்
இம்மோஹம் வந்ததன் காரணமென்சொல் ।
இச்செயல் சான்றோர் தவிர்த்ததன்றோ
உனக்கிது ஸ்வர்க்கமும் புகழுமளிக்காதே ॥

**श्रीभगवानुवाच ।**
**ஸ்ரீப⁴க³வாநுவாச ।**
कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
குதஸ்த்வா கஶ்மலமித³ம் விஷமே ஸமுபஸ்தி²தம் ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥
அநார்யஜுஷ்டமஸ்வர்க்³யமகீர்திகரமர்ஜுந ॥

**அத்தியாயம்: 02 பாடல்: 03**

ஓபார்த்தனே! பேடித்தன்மையை அடையாதே
உனக்கித் தன்மை பொருத்தமன்றே ।
"இழிந்த இவ்வுள்ளத் தளர்ச்சியினையே
விடுத்து போருக்கெழுந்திடு" பரந்தப! ॥

**क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।**

க்லைப்$^3$யம் மா ஸ்ம க$^3$ம: பார்த$^2$ நைதத்த்வய்யுபபத்$^3$யதே।

**क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥**

க்ஷுத்$^3$ரம் ஹ்ரு'த$^3$யதௌ$^3$ர்ப$^3$ல்யம் த்யக்த்வோத்திஷ்ட$^2$ பரந்தப ॥

**அத்தியாயம்: 02 பாடல்: 04**

**"அர்ஜுனன் புகன்றான்"**
ஓமதுசூதனா! இப்போர்களம்தனில் நான்
பெரியோராம் பீஷ்ம துரோணர்களை ।
அரிசூதனா! பூஜைக்குரிய இவர்களை
அம்புகளாலே எவ்விதம் எதிர்ப்பேன் ॥

**अर्जुन उवाच ।**

**அர்ஜுந உவாச ।**

**कथं भीष्ममहं सङ्ख्ये द्रोणं च मधुसूदन ।**

கத$^2$ம் பீ$^4$ஷ்மமஹம் ஸங்க்$^2$யே த்$^3$ரோணம் ச மது$^4$ஸூத$^3$ந ।

**इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥**

இஷுபி$^4$: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூத$^3$ந ॥

**அத்தியாயம்: 02 பாடல்: 05**

மேன்மை பொருந்தின ஆச்சார்யர்களைக் கொல்லாமல் இவ்வுலகிலே
மேன்மைதருமே பிச்சையால் கிட்டும் உணவையும்கூட உண்பதாலே।
குருமார்களைக் கொன்றபின் இப்புவியில் அனுபவிக்கப் போகிறேன்
இரத்தம்கலந்த செல்வமும்; ஆசைக்குரிய வஸ்து போகங்களையே॥

**गुरूनहत्वा हि महानुभावान्**
கு3ரூநஹத்வா ஹி மஹாநுபா4வாந்
**श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।**
ஶ்ரேயோ போ4க்தும் பை4க்ஷ்யமபீஹ லோகே ।
**हत्वार्थकामांस्तु गुरूनिहैव**
ஹத்வார்த2காமாம்ஸ்து கு3ரூநிஹைவ
**भुञ्जीय भोगान् रुधिरप्रदिग्धान् ॥**
பு4ஞ்ஜீய போ4கா3ந் ருதி4ரப்ரதி3க்3தா4ந் ॥

**அத்தியாயம்: 02 பாடல்: 06**

நமக்கு இவ்விரண்டில் எது சிறந்ததென் றறியோம்
நாமோ! இவர்களோ! வெல்வோம் என்பது மறியோம்।
எவர்களைக் கொன்ற பின் வாழவிரும்ப வில்லையோ
அத்துரியோதனாதிகளே எதிர்த்து நிற்கின்றனர் நம் முன்னே॥

**न चैतद्विद्मः कतरन्नो गरीयो**
ந சைதத்3வித்3ம: கதரந்நோ க3ரீயோ
**यद्वा जयेम यदि वा नो जयेयुः।**
யத்3வா ஜயேம யதி3 வா நோ ஜயேயு:।
**यानेव हत्वा न जिजीविषामस्**
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்
**तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः॥**
தேऽவஸ்தி2தா: ப்ரமுகே2 தா4ர்தராஷ்ட்ரா:॥

**அத்தியாயம்: 04 பாடல்: 09**

அர்ஜுனா!இவ்விதம் என்னுடைய தெய்வீகப்
பிறப்பையும் செயலையும் உள்ளவாறெவன் ।
அறிகின்றானோ, அவனுடலை விட்டபின்
மீண்டும்பிறவா துஎனையே அடைகிறான் ||

**जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।**
ஜந்ம கர்ம ச மே தி³வ்யமேவம் யோ வேத்தி தத்த்வத**:** ।
**त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥**
த்யக்த்வா தே³ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோ**S**ர்ஜுந ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 10**

ஆசையச்சம் சினம்நீக் கியோரெலாம்
என்மயமாய் யெனைத்தஞ்ச மடைந்தோரெலாம் ।
ஞானதபஸால் தூய்மையடைந் தோராய்ப்பலர்
என்னுடை இயல்பையே அடைகிறார்கள் ॥

**वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।**
வீதராக³ப⁴யக்ரோதா⁴ மந்மயா மாமுபாஶ்ரிதா: ।
**बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥**
ப³ஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்³பா⁴வமாக³தா: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 11**

எவர்களெனை எப்படி வழிபடுகின்றனரோ
அவர்களுக்குநா னவ்விதமே அருளுகின்றேன் ।
பார்த்தனே! மக்களெல் லாவிதங்களிலும்
என்னுடை வழியையே பின்பற்றுகின்றனரே ॥

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**
யே யதா$^{2}$ மாம் ப்ரபத்$^{3}$யந்தே தாம்ஸ்ததை$^{2}$வ ப$^{4}$ஜாம்யஹம் ।
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥**
மம வர்த்மாநுவர்தந்தே மநுஷ்யா: பார்த$^{2}$ ஸர்வஶ: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 12**

வினைகளின் பலன்களை விரும்புவர்கள்
தேவதைகளை இவ்வுலகில் பூஜிக்கின்றனர் ।
ஏனெனில் கர்மத்திலு திக்கும்பலன்கள்
விரைவில் வருகின்றனவே மனிதவுலகில் ॥

**काङ्क्षन्तः कर्मणां सिद्धिं यजन्त इह देवताः ।**
காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்$^{3}$தி$^{4}$ம் யஜந்த இஹ தே$^{3}$வதா: ।
**क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥**
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்$^{3}$தி$^{4}$ர்ப$^{4}$வதி கர்மஜா ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 13**

நான்குவர்ணங் களுமென்னால் குணத்திற்கும்
செயல்களுக்கு மேற்பப்படைக் கப்பட்டன ।
அவைகளைச் செய்தவனாயினும் செய்யாதவனாய்
மாற்றமில்லா தவனாயுமெனை அறிவாயாக! ॥

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
சாதுர்வர்ண்யம் மயா ஸ்ரு'ஷ்டம் கு$^3$ணகர்மவிபா$^4$க$^3$ஶ: ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥
தஸ்ய கர்தாரமபி மாம் வித்$^3$த்$^4$யகர்தாரமவ்யயம் ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 14**

என்னைச் செயல்கள் தீண்டுவதில்லை
எனக்குச் செயல்பலனிலே ஆசையில்லை ।
என்றெனை எவன்நன்கு அறிகின்றனோ
செயல்பலன் களாலவன் கட்டுண்ணான் ॥

न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।
ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மப$^2$லே ஸ்ப்ரு'ஹா ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥
இதி மாம் யோऽபி$^4$ஜாநாதி கர்மபி$^4$ர்ந ஸ ப$^3$த்$^4$யதே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 15**

இவ்விதமறிந்து முக்தியில் நாட்டமுடைய
முன்னோர்களாலும் செயல்கள் செய்யப்பட்டன।
ஆதலால்நீயும் முன்னாளில் முன்னோர்கள்
செய்துவந்த அச்செயல் களையேசெய்வாயாக॥

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
ஏவம் ஜ்ஞாத்வா க்ரு'தம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி⁴: ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥
குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வை: பூர்வதரம் க்ரு'தம் ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 16**

செயலெது செயலின்மை யெதுவென்று
மேதாவிகளும் மதிமயங்கி யேயுள்ளனர்।
எதையறிந்து துக்கத்தினின்று விடுபடுவாயோ
அச்செயல் பற்றியுனக்குப் பகர்வேன்கேள்॥

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபா⁴த் ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 17**

[1]செயல்களைப் பற்றியு மறியவேண்டும்
[2]செயல்தவிர்த்தல் பற்றியு மறியவேண்டும் ।
[3]செய்யாதிருத்தல் பற்றியு மறியவேண்டும்
செயலினியல்பு அறிதற்கு அரிதானதாம் ॥

[ 1 கர்மா = செயல்களைப் பற்றி [விதிக்கப்பட்ட]
2 விகர்மா = செயல் தவிர்த்தல்; 3 அகர்மா = செய்யாதிருத்தல் [செயல்] ]

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
கர்மணோ ஹ்யபி போ³த்³த⁴வ்யம் போ³த்³த⁴வ்யம் ச விகர்மண:।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥
அகர்மணஶ்ச போ³த்³த⁴வ்யம் க³ஹநா கர்மணோ க³தி:॥

**அத்தியாயம்: 04 பாடல்: 18**

யாரொருவன் செய்தலில் செயலின்மையையும்
செய்யாதிருத் தலில்செய லையும்காண்கிறானோ ।
மனிதருள் புத்திமானும் [1]யோகியுமாமவன்
செயவேண்டிய தெல்லாம் செய்துமுடித்தோனாம் ॥

[ 1 ஸ யுக்த: = யோகியுமாமவன் = ஞானத்தில் உறுதியுள்ளவனாம் ]

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
கர்மண்யகர்ம ய: பஶ்யேத³கர்மணி ச கர்ம ய: ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥
ஸ பு³த்³தி⁴மாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ரு'த்ஸ்நகர்மக்ரு'த் ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 19**

எவருடைய செயல்தொடக்கமு மவாவும்
பலனைச் சார்ந்தநோக்கமு மின்றியும் ।
ஞானத்தீ யால்எரிக்கப் பட்டதாயுளதோ,
[1]அறிவாளிகள், அவரை [2]ஞானியென்பரே ॥

[ 1 புதா: = அறிவாளிகள்;   2 பண்டிதம் = ஞானி ]

**यस्य सर्वे समारम्भाः कामसङ्कल्पवर्जिताः ।**
யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:[4] காமஸங்கல்பவர்ஜிதா: ।
**ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पण्डितं बुधाः ॥**
ஜ்ஞாநாக்[3]நித[3]க்[3]த[4]கர்மாணம் தமாஹு: பண்டி[3]தம் பு[3]தா[4]: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 20**

செயல்பலனிலே ஆழ்பற்றைவிட்டு என்றும்
செயலில்திருப்த னாய்எதையு மேசாராது ।
செயலில்ஈடு பட்டிருந்த பொழுதிலும்
செயலெதையும் செய்வதில்லை யவன் ॥

**त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।**
த்யக்த்வா கர்மப[2]லாஸங்க[3]ம் நித்யத்ரு’ப்தோ நிராஶ்ரய: ।
**कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥**
கர்மண்யபி[4]ப்ரவ்ரு’த்தோऽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 21**

எதிர்பார்ப்பற்ற, மனதையும் உடலையும்
நன்கடக்கி அனைத்துடைமை களைத்துறந்தும் ।
செயல்களை உடலைப்பேணுதற்கு மட்டுமே
செய்பவன், பாவத்தை அடைவதில்லையே ॥

## निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்3ரஹ: ।
## शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி3ஷம் ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 22**

தானாகக் கிடைத்ததில் மகிழ்வுடையோன்
பொறாமை யற்றவனிரு மைகளைக்கடந்தவன் ।
வெற்றி தோல்வியில் சமமாயுள்ளவன்
செயலைச் செய்யினும் பந்தப்படுவதில்லை ॥

## यदृच्छालाभसन्तुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।
யத்3ரு'ச்சா2லாப4ஸந்துஷ்டோ த்3வந்த்3வாதீதோ விமத்ஸர: ।
## समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥
ஸம: ஸித்3தா4வஸித்3தௌ4 ச க்ரு'த்வாபி ந நிப3த்4யதே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 23**

பற்றிலனாய் முக்தனாய் ஞானமதில்
நிலைபெற்ற மனத்தினை யுடையோனாய் ।
இறைவனுக்காகச் செயலில் ஈடுபடுமவனின்
எல்லாச் செயல்களும் கரைந்துவிடுகிறதே ॥

गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
க$^{3}$தஸங்க$^{3}$ஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்தி$^{2}$தசேதஸ: ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்$^{3}$ரம் ப்ரவிலீயதே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 24**

அர்ப்பணக்கருவியும் ஹவிஸும் [1]பிரம்மன்
அர்ப்பணிக்கிறதா மக்னியில் பிரம்மன் ।
அப்பிரம்மச்செயலில் மனம் குவிந்துள்ள
அவனால் அடையப்படுவதும் பிரம்மனே ॥

[ 1 ப்ரஹ்மன் = பிரம்மன் ]

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ப்$^{3}$ரஹ்மார்பணம் ப்$^{3}$ரஹ்ம ஹவிர்ப்$^{3}$ரஹ்மாக்$^{3}$நௌ ப்$^{3}$ரஹ்மணா ஹுதம் ।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥
ப்$^{3}$ரஹ்மைவ தேந க$^{3}$ந்தவ்யம் ப்$^{3}$ரஹ்மகர்மஸமாதி$^{4}$நா ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 25**

மற்ற யோகிகள் தேவதைகளையெலாம்
வேள்வியால் பூஜிக்கின்றனர், இன்னும் ।
வேறுசிலர் பிரம்மத்தீயில் [1]ஆத்மாவை
[2]ஆத்மாவினாலேயே வேள்வி செய்கின்றனர் ॥

[ 1 யஜ்ஞம் = ஆத்மாவை = உபாதிகளோடு கூடிய ஆத்மாவாகிய ஆஹுதியை 2 யஜ்ஞேனைவ = ஆத்மாவினாலேயே = சம்சாரத் தன்மையும் உபாதிகளுமற்ற ஆத்மாவினாலேயே ]

**दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।**
தை$^3$வமேவாபரே யஜ்ஞம் யோகி$^3$ந: பர்யுபாஸதே ।
**ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥**
ப்$^3$ரஹ்மாக்$^3$நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 26**

செவிமுதலிய புலன்களை வேள்வியாய்ச்-
சிலர்அடக்கு தலெனுமக்னியி லிடுகிறார்கள் ।
மற்றையோர் ஒலிமுதலாய் விஷயங்களை
வேள்வியாய்ப் புலனக்னியி லிடுகிறார்கள் ॥

**श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।**
ஶ்ரோத்ராதீ$^3$நீந்த்$^3$ரியாண்யந்யே ஸம்யமாக்$^3$நிஷு ஜுஹ்வதி ।
**शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥**
ஶப்$^3$தா$^3$தீ$^3$ந்விஷயாநந்ய இந்த்$^3$ரியாக்$^3$நிஷு ஜுஹ்வதி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 27**

மேலும்சிலர் [1]ஞானக்கர்மப் புலன்களின்
செயல்களை, விவேகத்தால் பிரகாசிக்கும் ।
ஆத்மாவினில் மனதையடக் குதலெனும்
யோகத்தீயில் வேள்வியாய்ச் செய்கின்றனர் ॥

[ 1 ஞான புலன்களின்; கர்ம புலன்களின் ]

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
ஸர்வாணீந்த்[3]ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥
ஆத்மஸம்யமயோகா[3]க்[3]நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீ[3]பிதே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 28**

சிலர்பொருட் களைதானமெனும் வேள்வியாகவும்,
தவ-யோகங் களையும், வேதமோதுதல்-ஞான ।
விசாரத்தை யும்வேள்வி யாய்ச்செயும்,விடா-
முயற்சிதீர் மானமுடை யோரெனஅனேகராம் ॥

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
த்[3]ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோக[3]யஜ்ஞாஸ்ததா[2]பரே ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥
ஸ்வாத்[4]யாயஜ்ஞாநயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா: ॥

அத்தியாயம்: 04 பாடல்: 29

மற்றுசிலர் அபானவாயுவில் பிராணனையும்
பிராணனிலபா னனையும்வேள்வி யாய்ச்செய்வர் ।
பிராணாபானப் போக்கினை அடக்கியேசிலர்
பிராணா யாமத்திலேயே கருத்தூன்றியுளர் ॥

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
அபாநே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபாநம் ததா[2]பரே ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥
ப்ராணாபாநக[3]தீ ருத்[3]த்[4]வா ப்ராணாயாமபராயணா: ॥

அத்தியாயம்: 04 பாடல்: 30

வேறுசிலர் உணவில்நியம முடையோராய்
பிராணனைப்பிரா ணனில்வேள்வி யாய்ச்செய்வர் ।
வேள்வியறிந் துசெய்யுமிவர் களனைவரும்
வேள்வியாலே பாவத்தைப்போக்கி யவர்களாம் ॥

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
அபரே நியதாஹாரா: ப்ராணாந்ப்ராணேஷு ஜுஹ்வதி ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥
ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ[3] யஜ்ஞக்ஷபிதகல்மஷா: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 31**

வேள்வியி லெஞ்சும் அமுதமுண்போர்
அழியாப் பிரம்மத்தை அடைகின்றனர் ।
[1]குருநந்தனா! வேள்விசெய் யாதோனுக்கு
இவ்வுலக மேயில்லை அவ்வுலகமேது? ॥

[ 1 குருஸத்தம = குருநந்தனா = அர்ஜுனா ]

**यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।**
யஜ்ஞஶிஷ்டாம்ரு'தபு[4]ஜோ யாந்தி ப்[3]ரஹ்ம ஸநாதநம் ।
**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥**
நாயம் லோகோऽஸ்த்யயஜ்ஞஸ்ய குதோऽந்ய: குருஸத்தம ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 32**

இங்ஙனம் பலவகையான வேள்வியெலாம்
வேதத்தின் வாயிலாய் விளம்பப்பட்டுள்ளன ।
அவையாவும் செயலில்தோன்றி யவைகளெனவறி
இவ்விதம்நீ யறிந்துப்பின் முக்தியடைவாயே ॥

**एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।**
ஏவம் ப[3]ஹுவிதா[4] யஜ்ஞா விததா ப்[3]ரஹ்மணோ முகே[2] ।
**कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥**
கர்மஜாந்வித்[3]தி[4] தாந்ஸர்வாநேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 33**

பரந்தப! பொருள்கொண்டுசெயும் வேள்வியினும்
ஞானத்தால் செயும்வேள்வி மிகவுயர்ந்தது ।
பார்த்தனே! எல்லாச்செயலும் மீதமின்றியே
ஞானத்தில் முழுமுடிவை அடைகின்றனவே ॥

**श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परन्तप ।**
ஶ்ரேயாந்த்$^{3}$ரவ்யமயாத்$^{3}$யஜ்ஞாஜ்ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ।
**सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥**
ஸர்வம் கர்மாகி$^{2}$லம் பார்த$^{2}$ ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 34**

வீழ்ந்துவணங்கியே பணிவிடை செய்தும்
உண்மையறியவே கேள்விகள் கேட்டும் ।
அதனையறிவோ மாக;கற்று ணர்ந்த
[1]ஆத்மஞானிகள் ஞானத்தை உபதேசிப்பரே ॥

[ 1 தத்த்வத$^{3}$ர்ஶிந: = தத்வம் உணர்ந்தோர் = ஆத்மஞானிகள் ]

**तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।**
தத்$^{3}$வித்$^{3}$தி$^{4}$ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
**उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥**
உபதே$^{3}$க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வத$^{3}$ர்ஶிந: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 35**

பாண்டவா! எதையறிந்தபின் மோஹத்தை
மீண்டுமடை யமாட்டாயோ எதனால் ।
அனைத்து உயிர்களையுமே உன்னிடத்தும்
என்னிடத்தும் காண்பாயோ அதையறிவாய் ॥

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।
யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்ட[3]வ ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥
யேந பூ4தாந்யஶேஷேண த்[3]ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ[2] மயி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 36**

பாவஞ்செய்தோ ரெல்லோரை நோக்கினும்
பெரும்பாவம் செய்தவனாய் நீயிருப்பினும் ।
ஆத்மஞானமென்னும் [1]படகிலேறி எளிதில்
பாவமங்களனைத் தையும் கடந்திடுவாய்நீ ॥

[ 1 ப்லவ = படகு = தெப்பம், ஓடம் ]

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
அபி சேத[3]ஸி பாபேப்[4]ய: ஸர்வேப்[4]ய: பாபக்ரு'த்தம: ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं सन्तरिष्यसि ॥
ஸர்வம் ஜ்ஞாநப்லவேநைவ வ்ரு'ஜிநம் ஸந்தரிஷ்யஸி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 37**

அர்ஜுனா! சுடர்விட்டெரியும் நெருப்பானது
எவ்விதம் விறகுகளை[1]நீறாகச் செய்யுமோ ।
அவ்விதம் ஞானமெனுமக் கனலானது
அனைத்துச் செயல்களையும் நீறாக்குமே ॥

[ 1 பஸ்மஸாத் = நீறாக = சாம்பலாக ]

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
யதை2தா4ம்ஸி ஸமித்3தோ4ऽக்3நிர்ப4ஸ்மஸாத்குருதேऽர்ஜுந ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥
ஜ்ஞாநாக்3நி: ஸர்வகர்மாணி ப4ஸ்மஸாத்குருதே ததா2 ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 38**

இவ்வுலகில் தூய்மைதனைத் தருதலில்
ஞானத்துக் கொப்பானதே துமில்லையே ।
செயல்யோக மதில்நிறைவ டைந்தோனதை
காலப்போக் கில்தன்னகத் தடைகின்றான் ॥

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
ந ஹி ஜ்ஞாநேந ஸத்3ரு'ஶம் பவித்ரமிஹ வித்3யதே ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥
தத்ஸ்வயம் யோக3ஸம்ஸித்3த:4 காலேநாத்மநி விந்த3தி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 39**

சிரத்தையும் முக்தியும் மேலாயுடையோன்
புலன்களைய டக்கியோன் ஞானமடைகிறான் ।
ஞானமதனை யடைந்தபி னவன்மேலாம்
அமைதியினைத் தாமதமின்றி யடைகின்றான் ॥

**श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।**
ஶ்ரத்$^3$தா$^4$வாந்ல்லப$^4$தே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்$^3$ரிய: ।
**ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥**
ஜ்ஞாநம் லப்$^3$த்$^4$வா பராம் ஶாந்திமசிரேணாதி$^4$க$^3$ச்ச$^2$தி ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 40**

அறிவிலி யும்[1]நம்பிக்கை யில்லோனும்
ஐயமுறு பவனுமழிவை யடைகின்றான் ।
சந்தேக முறுமவனுக்கிவ் வுலகும்
அவ்வுல குமில்லை,சுகமு மில்லையே ॥

[ 1 சிரத்தை = நம்பிக்கை ]

**अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।**
அஜ்ஞஶ்சாஶ்ரத்$^3$த$^3$தா$^4$நஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।
**नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥**
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுக$^2$ம் ஸம்ஶயாத்மந: ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 41**

யோகத்தினால் செயல்களைத் துறந்தவனை
[1]மெய்யறிவினால் ஐயங்களை யகற்றியவனை ।
தன்னாத்ம சொரூபத்தி லிருக்குமவனை
தனஞ்ஜயா! செயல்கள் தீண்டுவதில்லை ॥

[ 1 மெய்யறிவு = ஜீவ ஈஶ்வர ஐக்கிய ஞானம் ]

**योगसंन्यस्तकर्माणं ज्ञानसञ्छिन्नसंशयम् ।**
யோக[3]ஸம்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சி[2]ந்நஸம்ஶயம் ।
**आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥**
ஆத்மவந்தம் ந கர்மாணி நிப[3]த்[4]நந்தி த[4]நஞ்ஜய ॥

**அத்தியாயம்: 04 பாடல்: 42**

ஆதலால் நீயறியாமை யாலுதித்திருக்கும்
அகஉள்ளத் திலுளஇவ்வான்ம சந்தேகத்தை ।
மெய்ஞானமெ னும்வாளினால் வெட்டிவீழ்த்தி
யோகம் தனைக்கைக்கொள் பாரதா!எழுந்திரு ॥

**तस्मादज्ञानसम्भूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।**
தஸ்மாத[3]ஜ்ஞாநஸம்பூ[4]தம் ஹ்ரு'த்ஸ்த[2]ம் ஜ்ஞாநாஸிநாத்மந: ।
**छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥**
சி[2]த்த்வைநம் ஸம்ஶயம் யோக[3]மாதிஷ்டோ[2]த்திஷ்ட[2] பா[4]ரத ॥



## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## “அறிவால் செயலைவிலக்கி அறிதல்”

எனும் இந்நான்காம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
ஓம் தத்ஸதி³தி ஸ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு

ब्रह्मविद्यायां योगशास्त्रे
ப்³ரஹ்மவித்³யாயாம் யோக³ஶாஸ்த்ரே

श्रीकृष्णार्जुनसंवादे
ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே³

ज्ञानकर्मसंन्यासयोगो नाम
ஜ்ஞாநகர்மஸம்ந்யாஸயோகோ³ நாம

चतुर्थोऽध्यायः ॥
சதுர்தோ²ऽத்⁴யாய: ॥

ஓம் நமோ நாராயணாய ஜய ஜய சத்குரு

## ஓம் ஸ்ரீபரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பகவத்கீதை
# श्रिमद्भगवद्गीता

## ஐந்தாம் அத்தியாயம்
## “செயல்துறவு”

**अथ पञ्चमोऽध्यायः ।**
**அத[2] பஞ்சமோSத்[4]யாய: ।**

**संन्यासयोगः**
**ஸம்ந்யாஸயோக[3]:**

# ஹரி: ஓம்!



எவர்மனம் சமத்தில் நிலைத்துள்ளதோ
அவர்களால் பிறப்பும் வெல்லப்பட்டதாம் ।
ஏனெனில் குற்றமிலா சமமாம்பிரம்மம்
ஆதலாலவர் பிரம்மனில் நிலையாயுளரே ॥ [ ப.கீ. 05.19 ]

**அத்தியாயம்: 05 பாடல்: 01**

**"அர்ஜுனன் புகன்றான்"**
கிருஷ்ணா! தாங்கள்செயல் துறத்தலையும்
செயல் யோகத்தையும் புகழ்கின்றீர்கள் |
ஏதெனக்கு இவ்விரண்டினில் மேலானதோ
அஃதொன் றைநிச்சயித்துப் பகரவேண்டுமே ||

**अर्जुन उवाच ।**
**அர்ஜுந உவாச ।**
संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
ஸம்ந்யாஸம் கர்மணாம் க்ரு'ஷ்ண புநர்யோக³ம் ச ஶம்ஸஸி ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥
யச்ச்²ரேய ஏதயோரேகம் தந்மே ப்³ரூஹி ஸுநிஶ்சிதம் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 02**

**"ஶ்ரீபகவான் பகர்ந்தார்"**
1செயலைத் துறத்தலும் 2செயல்யோகமும்
இவ்விரண்டும் மேன்மை அளிப்பவையே ।
ஆனாலவை களில்செயலைத் துறத்தலினும்
செயலைச் செய்த லென்பதுமேலானதே ॥

[ 1 ஸம்ந்யாஸ = ஸாங்க்ய யோகம் / செயல்துறவு / ஞான யோகம் / சன்யாஸ வாழ்க்கை; 2 கர்மயோகம் / செயல் யோகம் / க்ருஹஸ்த பாதை / இல்வாழ்க்கை ]

**श्रीभगवानुवाच ।**
**ஶ்ரீப⁴க³வாநுவாச ।**
संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
ஸம்ந்யாஸ: கர்மயோக³ஶ்ச நி:ஶ்ரேயஸகராவுபௌ⁴ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥
தயோஸ்து கர்மஸம்ந்யாஸாத்கர்மயோகோ³ விஶிஷ்யதே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 03**

பெருந்தோளா! விருப்பும் வெறுப்புமற்றோன்
என்றும்துறவி யென்றறி யத்தக்கவன் ।
ஏனெனில் இருமைகளை விட்டொழித்தவன்
எளிதில் தளைகளிலிருந்து விடுபடுகிறானே ॥

**ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।**
ஜ்ஞேய: ஸ நித்யஸம்ந்யாஸீ யோ ந த்³வேஷ்டி ந காங்க்ஷதி ।
**निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥**
நிர்த்³வந்த்³வோ ஹி மஹாபா³ஹோ ஸுக²ம் ப³ந்தா⁴த்ப்ரமுச்யதே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 04**

செயல்துறவையும், செயல் யோகத்தையும்
பாலர்கள்வேறாய்ப் பகர்வர், பண்டிதரோ ।
அவ்விதமில்லை, இவற்றுள் ஒன்றினில்
நிலைத்தோனிரண் டின்பலனைப் பெறுகிறானே ॥

**साङ्ख्ययोगौ पृथग्बालाः प्रवदन्ति न पण्डिताः ।**
ஸாங்க்²யயோகௌ³ ப்ருʼத²க்³பா³லா: ப்ரவத³ந்தி ந பண்டி³தா: ।
**एकमप्यास्थितः सम्यगुभयोर्विन्दते फलम् ॥**
ஏகமப்யாஸ்தி²த: ஸம்யகு³ப⁴யோர்விந்த³தே ப²லம் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 05**

எந்நிலை யடைவரோ செயல்துறந்தோர்
அந்நிலை யடைவரே செயல்யோகத்தார் ।
எவன் யோகம்ஸாங்க்ய மிரண்டினையும்
ஒன்றாய்க் [1]காணுமவன்-அவனே காணுமவன் ॥

[ 1 ய: பஸ்யதி ஸ: பஸ்யதி = காணுமவன் (எவனோ) அவனே காண்கின்றான் ]

**यत्साङ्ख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।**
யத்ஸாங்க்[2]யை: ப்ராப்யதே ஸ்தா[2]நம் தத்[3]யோகை[3]ரபி க[3]ம்யதே ।
**एकं साङ्ख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥**
ஏகம் ஸாங்க்[2]யம் ச யோக[3]ம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 06**

பெருந்தோளாய்! செயல்யோக மின்றித்துறவை
அடைவதரிதாமா னாலிறைதியா னத்துடன் ।
கூடியேமுயற்சி செய்யும்முனி வனானவன்
தாமதமின்றியே பிரம்மத்தை யடைகின்றான் ॥

**संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।**
ஸம்ந்யாஸஸ்து மஹாபா[3]ஹோ து[3]: க[2]மாப்துமயோக[3]த: ।
**योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥**
யோக[3]யுக்தோ முநிர்ப்[3]ரஹ்ம நசிரேணாதி[4]க[3]ச்ச[2]தி ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 07**

செயல்யோகம் கூடிமனந் தெளிந்தோன்
உடல்புலன் எல்லாம்நன் கடக்கியே ।
அனைத்துயிர் களைத்தன் னாத்மாவாய்க்-
காணுபவன்செயல் செய்யினுமது தீண்டாதே ॥

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।
யோக[3]யுக்தோ விஶுத்[3]தா[4]த்மா விஜிதாத்மா ஜிதேந்த்[3]ரிய: ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥
ஸர்வபூ[4]தாத்மபூ[4]தாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 08**

தத்துவம்தனை யறிந்த யோகியவன்
பார்த்தல்கேட் டல்தொடு தல்பேசுதல் ।
முகர்தலுண்ணு தலுறங்கு தல்செயினும்
சுவாசித்தல்போ தல்விட லெடுத்தலும் ॥ .....

नैव किञ्चित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥
பஶ்யஞ்ஶ்ரு'ண்வந்ஸ்ப்ரு'ஶஞ்ஜிக்[4]ரந்நஶ்நந்க[3]ச்ச[2]ந்ஸ்வபஞ்ஶ்வஸந் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 09**

கண்திறந்து மூடுமிவை களைச்செயினும்
புலன்கள் புலபொருட் களிலுள்ளன ।
எனத்தெளிந்து நானெதனையும் செய்வதில்லை
என்றெண்ணி உறுதியுட னிருப்பானே ॥

**प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।**
ப்ரலபந்விஸ்ருʼஜந்க்$^{3}$ருʼஹ்ணந்நுந்மிஷந்நிமிஷந்நபி ।
**इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥**
இந்த்$^{3}$ரியாணீந்த்$^{3}$ரியார்தே$^{2}$ஷு வர்தந்த இதி தா$^{4}$ரயந் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 10**

எவனிறை வனிடமர்ப்பித் துச்செயல்களைப்-
பற்றின் றியேசெய்கின் றானோவவன் ।
பாவத்தி னால்-பற்றுதலற் றிருப்பான்
தாமரை யிலைத்தண்ணீர் போன்றே ॥

**ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।**
ப்$^{3}$ரஹ்மண்யாதா$^{4}$ய கர்மாணி ஸங்க$^{3}$ம் த்யக்த்வா கரோதி ய: ।
**लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥**
லிப்யதே ந ஸ பாபேந பத்$^{3}$மபத்ரமிவாம்ப$^{4}$ஸா ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 11**

செயல்யோகிகள் பற்றினை விடுத்தே
மனத்தூய்மைப் பொருட்டு வெறும்- ।
உடலாலும் மனத்தாலும் புத்தியாலும்
புலனினாலும் மட்டுமே செயல்புரிவரே ॥

**कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।**
காயேந மநஸா பு$^3$த்$^3$த்$^4$யா கேவலைரிந்த்$^3$ரியைரபி ।
**योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥**
யோகி$^3$ந: கர்ம குர்வந்தி ஸங்க$^3$ம் த்யக்த்வாத்மஶுத்$^3$த$^4$யே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 12**

[1]யோகியானவன் செயல்பலனைத் துறந்து
[2]நிஷ்டையா லுதிக்குமமைதி யுடையோனாம் ।
செயல்யோக மற்றோனோ ஆசையுந்துதலால்
பலனில்பற்று வைத்தே கட்டுறுகிறான் ॥

[ 1 யுக்த**:** = யோகி = செயல்யோகி**;** 2 நைஷ்டிகீம் = நிஷ்டை = நியமத்தால் உறுதிபெற்ற ]

**युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।**
யுக்த**:** கர்மப$^2$லம் த்யக்த்வா ஶாந்திமாப்நோதி நைஷ்டி$^2$கீம் ।
**अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥**
அயுக்த**:** காமகாரேண ப$^2$லே ஸக்தோ நிப$^3$த்$^4$யதே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 13**

புலன்மன மிவைகளைவசப் படுத்திய[1]தேஹீ
[2]விவேகத்தால் செயலையெலாம் விலக்கியே ।
ஏதும்செய்யாதும் செய்விக்காது மொன்பது
வாயிலுடைய நகரில்சுகமாயி ருக்கின்றானே ॥

[ 1 தேஹீ = உடலை உடையவன்; 2 மனஸா = விவேகத்தால் ]

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
ஸர்வகர்மாணி மநஸா ஸம்ந்யஸ்யாஸ்தே ஸுக[2]ம் வஶீ ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥
நவத்[3]வாரே புரே தே[3]ஹீ நைவ குர்வந்ந காரயந் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 14**

பரமாத்மா எவர்க்கும் செயல்களையும்
செய்பவனென் பதையுமுண்டு பண்ணுவதில்லை ।
செயல்பலனி னிணைப்பையும் செய்வதில்லையே
சுபாவம் அனைத்தையும் செய்விக்கின்றதே ॥

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
ந கர்த்ரு'த்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ரு'ஜதி ப்ரபு:[4] ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥
ந கர்மப[2]லஸம்யோக[3]ம் ஸ்வபா[4]வஸ்து ப்ரவர்ததே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 15**

எங்குமுள்ள ஆத்மா எவருடையபாவ-
புண்ணியங் களையும் ஏற்பதில்லையே ।
அறிவு-அறி யாமையால் மறைபட்டுளதே
ஆதலால் மனிதர்கள் மயங்குகின்றனரே ॥.

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
நாத[3]த்தே கஸ்யசித்பாபம் ந சைவ ஸுக்ரு'தம் விபு[4]: ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥
அஜ்ஞாநேநாவ்ரு'தம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 16**

ஆனால், எவர்களுடைய அவ்வறியாமை
ஆத்ம அறிவினால ழிக்கப்பட்டுளதோ ।
அவர் தம்ஞானம் கதிரவன்போல்
அப்பரம் பொருளை விளங்கச்செய்கிறதே ॥

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः।
ஜ்ஞாநேந து தத[3]ஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந: ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम्।।
தேஷாமாதி[3]த்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம் ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 17**

[1]அதில் புத்தியுளோரதுவே தாமாயிருப்போர்
அதிலே நிலைபெற்றவரா யதையேமேலாம் ।
அடைக் கலமாயடைந்து, ஞானத்தால்பாவம்
அழித் தோர்திரும்பிவாரா நிலையடைவரே ॥

[ 1 தத் = அதில் = அப்பரமாத்மாவினில் ]

**तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।**
தத்$^{3}$பு$^{3}$த்$^{3}$த$^{4}$யஸ்ததா$^{3}$த்மாநஸ்தந்நிஷ்டா$^{2}$ஸ்தத்பராயணா**:** ।
**गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥**
க$^{3}$ச்ச$^{2}$ந்த்யபுநராவ்ரு'த்திம் ஜ்ஞாநநிர்தூ$^{4}$தகல்மஷா**:** ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 18**

கல்விய டக்கமுடைய அந்தணரிடத்தும்
பசுயா னையிடத்தும் நாயினிடத்தும் ।
நாயைச்ச மைத்துண் போனிடத்தும்
ஞானியர் சமதிருஷ்டி யுடனிருப்பரே ॥

**विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।**
வித்$^{3}$யாவிநயஸம்பந்நே ப்$^{3}$ராஹ்மணே க$^{3}$வி ஹஸ்திநி ।
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥**
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி$^{3}$தா: ஸமத$^{3}$ர்ஶிந: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 19**

எவர்மனம் சமத்தில் நிலைத்துள்ளதோ
அவர்களால் பிறப்பும் வெல்லப்பட்டதாம் ।
ஏனெனில் குற்றமிலா சமமாம்பிரம்மம்
ஆதலாலவர் பிரம்மனில் நிலையாயுளரே ॥

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।
இஹைவ தைர்ஜித: ஸர்கோ[3] யேஷாம் ஸாம்யே ஸ்தி[2]தம் மந: ।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद् ब्रह्मणि ते स्थिताः ॥
நிர்தோ[3]ஷம் ஹி ஸமம் ப்[3]ரஹ்ம தஸ்மாத்[3] ப்[3]ரஹ்மணி தே ஸ்தி[2]தா: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 20**

பிரம்மத்தை யறிந்தோன் அதில்நிலைபெற்று
மயக்கமில்லா உறுதியானபுத்தி யுடையோன் ।
பிரியமான தையடைந்து மகிழ்வதுமில்லை
பிரியமற்ற தையடைந்து வருந்துவதுமி[ல்]லையே ॥

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।
ந ப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம் ப்ராப்ய நோத்[3]விஜேத்ப்ராப்ய சாப்ரியம் ।
स्थिरबुद्धिरसम्मूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥
ஸ்தி[2]ரபு[3]த்[3]தி[4]ரஸம்மூடோ[4] ப்[3]ரஹ்மவித்[3] ப்[3]ரஹ்மணி ஸ்தி[2]த: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 21**

புறப்பொருட் களில்மனம் பற்றாதோன்
ஆத்மாவிட முள்ளசுகத் தையடைகிறான் ।
பிரம்மசமா தியில்நிலைத்த வறிவுடையோன்
அழிவில்லா ஆனந்தம் அனுபவிக்கின்றான் ॥

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।**
பா$^{3}$ஹ்யஸ்பர்ஶேஷ்வஸக்தாத்மா விந்த$^{3}$த்யாத்மநி யத்ஸுக$^{2}$ம்।
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षयमश्नुते ॥**
ஸ ப்$^{3}$ரஹ்மயோக$^{3}$யுக்தாத்மா ஸுக$^{2}$மக்ஷயமஶ்நுதே ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 22**

புலப்பொருட் களைத்தீண்டு வதாலுதித்த
[1]இன்பங்களே துக்கத்திற் குக்காரணமாம் ।
துவக்கமும் முடிவுமுள்ள வவைகளில்
கௌந்தேயா! ஞானியர் களின்புறுவதில்லையே ॥

[ 1 போகா = இன்பங்கள் ]

**ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।**
யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா போ$^{4}$கா$^{3}$ து:$^{3}$க$^{2}$யோநய ஏவ தே ।
**आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥**
ஆத்$^{3}$யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே பு$^{3}$த$^{4}$: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 23**

இப்பிறவியில் உடலை விடும்முன்பே
ஆசைகோபம் இவைதம் மால்தோன்றும் ।
வேகமதைத் தாங்க வல்லோனேயோகியாம்
அவனே மகிழ்ச்சியுடைய மனிதனாம் ॥

**शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।**
ஶக்நோதீஹைவ ய: ஸோடு[4]ம் ப்ராக்ஶரீரவிமோக்ஷணாத் ।
**कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥**
காமக்ரோதோ[4]த்[3]ப[4]வம் வேக[3]ம் ஸ யுக்த: ஸ ஸுகீ[2] நர: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 24**

எவன் தன்னிலே இன்பம்துய்த்தும்
தன்னி லேகளிப் படைந்துமவ்விதம் ।
எவன் உட்ப்ர காசமுளனோஅவ்யோகி
[1]பிரம்மமா யறிந்து [2]பேரானந்தமடைகிறானே ॥

[ 1 பிரம்மபூத: = பிரம்மமாய்த் தனை அறிந்து;
2 பிரம்மநிர்வாணம் = பேரானந்தம் / பிரம்மானந்தம் ]

**योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।**
யோऽந்த:ஸுகோ[2]ऽந்தராராமஸ்ததா[2]ந்தர்ஜ்யோதிரேவ ய: ।
**स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥**
ஸ யோகீ[3] ப்[3]ரஹ்மநிர்வாணம் ப்[3]ரஹ்மபூ[4]தோऽதி[4]க[3]ச்ச[2]தி ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 25**

பாவங்களைக் களைந்தும் ஐயங்களை-
யகற்றியும் புலனடக்க முடையோராய் ।
உயிரனைத்தின் நன்மையில் மகிழ்வுடை
ரிஷிகள்[1]முக் தியினையடை கின்றார்கள் ॥

[ 1 ப்ரஹ்மநிர்வாணம் = முக்தி ]

**लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।**
லப⁴ந்தே ப்³ரஹ்மநிர்வாணம்ரு’ஷய: க்ஷீணகல்மஷா: ।
**छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥**
சி²ந்நத்³வைதா⁴ யதாத்மாந: ஸர்வபூ⁴தஹிதே ரதா: ॥

**அத்தியாயம்: 05 பாடல்: 26**

ஆசைகோபத் தினின்றும் விடுபட்டோரும்,
ஆத்மாவினை அறிந்தவர் களும்,மனத்தை ।
அடக்கியோரு மான,சந் யாஸிகளுக்கு
இம்மையிலும் மறுமையிலும் முக்தியுள்ளதே ॥

**कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।**
காமக்ரோத⁴வியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம் ।
**अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥**
அபி⁴தோ ப்³ரஹ்மநிர்வாணம் வர்ததே விதி³தாத்மநாம் ॥

வெளியிலுள்ள பொருட்களை வெளியேவைத்தும்
கண்களைப் புருவங்களிடை யிருத்தியும் ।
மூக்கிலியங் கும்பிராண அபானங்களை
நன்குசமன் செய்துபுலன் மனபுத்தி- ॥

இவைதமை நன்கடக்கியே முக்தியினை
மேலாமிலக் காய்க்கருதியே, பயமச்சமும் ।
விருப்பும் விலக்கிய வனானஅந்த
முனிவனவன் எப்பொழுதும் முக்தன்தானே ॥

**स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।**

ஸ்பர்ஶாந்க்ரு'த்வா ப$^{3}$ஹிர்பா$^{3}$ஹ்யாம்ஶ்சக்ஷுஶ்சைவாந்தரே ப்$^{4}$ருவோ: ।

**प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥**

ப்ராணாபானௌ ஸமௌ க்ரு'த்வா நாஸாப்$^{4}$யந்தரசாரிணௌ ॥

**यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।**

யதேந்த்$^{3}$ரியமனோபு$^{3}$த்$^{3}$தி$^{4}$ர்முநிர்மோக்ஷபராயண: ।

**विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥**

விக$^{3}$தேச்சா$^{2}$ப$^{4}$யக்ரோதோ$^{4}$ ய: ஸதா$^{3}$ முக்த ஏவ ஸ: ॥

யாகதவம் இவைகளை அனுபவிப்பனாக
அனைத்துல கங்களுக் குமீஶ்வரனாக ।
அனைத்துயிர் களுக்கும் நண்பனாகஎனை
அறியுமவன் சாந்தியை அடைகின்றான் ॥

**भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।**
போ⁴க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் ।
**सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥**
ஸுஹ்ரு'த³ம் ஸர்வபூ⁴தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ரு'ச்ச²தி ॥





## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## "செயல்துறவு"

எனும் இவ்வைந்தாம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु

ஓம் தத்ஸதி³தி ஸ்ரீமத்³ப⁴க³வத்³கீ³தாஸூபநிஷத்ஸு

ब्रह्मविद्यायां योगशास्त्रे

ப்³ரஹ்மவித்³யாயாம் யோக³ஶாஸ்த்ரே

श्रीकृष्णार्जुनसंवादे

ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே³

संन्यासयोगो नाम

ஸம்ந்யாஸயோகோ³ நாம

पञ्चमोऽध्यायः ॥

பஞ்சமோऽத்⁴யாய: ॥

ஓம் நமோ நாராயணாய ஜய ஜய சத்குரு

ஓம் ஸ்ரீபரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பகவத்கீதை
# श्रिमद्भगवद्गीता

## ஆறாம் அத்தியாயம்
## "தியானத்தில் தெளிவு"

अथ षष्ठोऽध्यायः ।

அத² ஷஷ்டோ²Sத்⁴யாய: ।

आत्मसंयमयोगः (or) ध्यानयोगः

ஆத்மஸம்யமயோக:³ (அ) த்⁴யாநயோக³:

# ஹரி: ஓம்!



ஆசைகளாகிய நீரலைகள், மலர்களாகிய வாசனைகள், பட்டாம்பூச்சிபோல் சுற்றித்திரியும் மனம், இவற்றை விழிப்புணர்வாய் தியானித்தல்

**அத்தியாயம்: 06 பாடல்: 01**

**“ஸ்ரீபகவான் பகர்ந்தார்”**
எவன்செயல் பலனைச்சாராம லிருந்து
செய்யவேண்டிய செயலைச் செய்பவனோ |
அவன்சந்யா ஸியும்யோகி யுமாவான்,
[1]அக்னிகர்மமும் செயலையும் விட்டவனாகான் ||

[1 அக்னிகர்மம் = அக்னி ஹோத்ராதி கர்மங்கள் ]

श्रीभगवानुवाच ।
**ஸ்ரீப⁴க³வானுவாச ।**
अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
அநாஶ்ரித: கர்மப²லம் கார்யம் கர்ம கரோதி ய: ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥
ஸ ஸம்ந்யாஸீ ச யோகீ³ ச ந நிரக்³நிர்ந சாக்ரிய: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 02**

பாண்டவனே! எதைசன்யாஸ மென்று
பகர்வரோ அதையோகமென்று அறிதி ।
ஏனென்றால் ஸங்கல்பத்தை விடாத
எவனும்யோ கியாய்ஆக மாட்டான் ॥

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
யம் ஸம்ந்யாஸமிதி ப்ராஹுர்யோக³ம் தம் வித்³தி⁴ பாண்ட³வ ।
न ह्यसंन्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन ॥
ந ஹ்யஸம்ந்யஸ்தஸங்கல்போ யோகீ³ ப⁴வதி கஶ்சந ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 3**

தியானயோகம தில்முன்னேற விரும்பும்
முனிக்குச்செயல் சாதனமாய்ச் சொலப்பட்டது ।
தியானயோகம தில்முன்னேறி யவனுக்கே
செயலின்மை சாதனமாய்ச் சொலப்பட்டது ॥

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
ஆருருக்ஷோர்முநேர்யோக³ம் கர்ம காரணமுச்யதே ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥
யோகா³ரூட⁴ஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 04**

எப்பொழுதுபுலப் பொருட்கள னைத்திலும்
செயல்களிலும் பற்றுக்கொள்வ தில்லையோ ।
அப்பொழுதுஎல் லா[1]சங்கல்பங் களையும்
துறந்தயோகியை யோகநிலையுற்ற வரென்பர் ॥

[ 1 சங்கல்பங்களையும் = எண்ணங்களையும் ]

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
யதா³ ஹி நேந்த்³ரியார்தே²ஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।
सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥
ஸர்வஸங்கல்பஸம்ந்யாஸீ யோகா³ரூட⁴ஸ்ததோ³ச்யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 05**

தன்னைத்தானே உயர்த்திக் கொள்வானாக
தன்னைத்தாழ்த் திக்கொளாதி ருப்பானாக ।
ஏனென்றால் தனக்குத்தானே நண்பனும்
தனக்குத்தானே பகைவனு மாவானவன் ।

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
உத்$^{3}$த$^{4}$ரேதா$^{3}$த்மநாத்மாநம் நாத்மாநமவஸாத$^{3}$யேத் ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥
ஆத்மைவ ஹ்யாத்மநோ ப$^{3}$ந்து$^{4}$ராத்மைவ ரிபுராத்மந: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 06**

[1]எவ்வாத்மா வினா[2]லாத்மா வெல்லப்பட்டதோ
அவ்வாத்மா அவனுடையாத்மா வுக்குநண்பன் ।
ஆனாலாத்மா வைவெல்லாதவ னுக்கவனே
எதிரியைப்போ லேபகையுட னிருப்பானே ॥

[ 1 எவ்வாத்மா = யார் தன்னை; 2 ஆத்மா = தன்னை ]

बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
ப$^{3}$ந்து$^{4}$ராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜித: ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத் ॥

# ஸ்ரீமத் பகவத்கீதை
## “தியானத்தில் தெளிவு”

**அத்தியாயம்: 06 பாடல்: 07**

தன்னைவென்று மனம் தெளிந்தோனுக்குச்-
[1]சீதோஷ்ணசுக துக்கத் திலுமவ்விதமே ।
மானஅவமானத் திலும் சித்தமொருமுக-
மாகிப்பரமாத் மாவில் நிலைத்திருக்குமே ॥

[ 1 சீதோஷ்ணசுகதுக்க = குளிர்- வெப்பம்; இன்பம்-துன்பம் ]

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥
ஶீதோஷ்ணஸுக[2]து:[3]கே[2]ஷு ததா[2] மாநாபமாநயோ: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 08**

[1]அறிவில்-அனு பவஅறிவில் மனநிறைவும்
[2]மாறுதலில்லா தோன்புலன் களையு[3]மொருங்- ।
கிணைத்தோன், கல்மண் பொன்னிவைதமைக்-
காணுமிடத்தும் யோகிசமமாயி ருப்பானென்பர் ॥

[ 1 ஞானவிக்ஞான = அறிவில்-அனுபவ அறிவில் ;
2 கூடஸ்த: = மாறுதலில்லாதோன்; 3 யுக்த: = ஒருங்கிணைத்தவன் ]

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
ஜ்ஞாநவிஜ்ஞாநத்ரு'ப்தாத்மா கூடஸ்தோ[2] விஜிதேந்த்[3]ரிய: ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥
யுக்த இத்யுச்யதே யோகீ[3] ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 09**

நல்லுள்ளமு டையோன்நண் பன்பகைவன்
உதாஸீனனும் நடுவுநிற் போனுறவினன் ।
வெறுப்புக்கு ரியோன்சாது பாவிகளிடமும்
சமபுத்தி யுடையோன் சிறந்தோனாவான் ॥

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
ஸுஹ்ரு'ந்மித்ரார்யுதா$^{3}$ஸீநமத்$^{4}$யஸ்த$^{2}$த்$^{3}$வேஷ்யப$^{3}$ந்து$^{4}$ஷு ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥
ஸாது$^{4}$ஷ்வபி ச பாபேஷு ஸமபு$^{3}$த்$^{3}$தி$^{4}$ர்விஶிஷ்யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 10**

யோகிதனிமையில் தனியாய் இருந்தும்,
ஆசைகளும் பொருட்களும் இன்றியும், ।
தன்னடக்க முடையோனாய் எப்பொழுதும்
தியானத்தில் தானீடுபட வேண்டும் ॥

योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।
யோகீ$^{3}$ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தி$^{2}$த: ।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥
ஏகாகீ யதசித்தாத்மா நிராஶீரபரிக்$^{3}$ரஹ: ॥

அத்தியாயம்: 06 பாடல்: 11

தூய்மையான அசையாததான இடத்தில்
தர்பைதோல் மேல்பருத்தித் துணியாலான
தனக்காகவே ஆனஆசனத்தை மிகவும்
தாழ்வுமின்றி, உயரமுமின்றியே அமைத்து . . . . ||

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।
ஶுசௌ தே³ஶே ப்ரதிஷ்டா²ப்ய ஸ்தி²ரமாஸநமாத்மந: ।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥
நாத்யுச்ச்²ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ॥

அத்தியாயம்: 06 பாடல்: 12

ஆங்காசனத் தமர்ந்து மனதைநன்-
கொருமுனைப் படுத்தியே புலன்மனச்- ।
செயல்களை யடக்கியே மனத்தின்
தூய்மைகருதி [1]தியானம்ப ழகவேண்டும் ||

[ 1 யோகம் = தியானம் ]

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
தத்ரைகாக்³ரம் மந: க்ரு'த்வா யதசித்தேந்த்³ரியக்ரிய: ।
उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத்³யோக³மாத்மவிஶுத்³த⁴யே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 13**

உடல்தலைக் கழுத்திவைதமை நேராயும்
அசையாமலே யிருத்தியு றுதியுடனும் ।
தன்னுடைய மூக்கின்நு னியைக்கண்டும்
திசைகளைக் காணாமல் அமரவேண்டுமே ॥

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।**
ஸமம் காயஶிரோக்$^{3}$ரீவம் தா$^{4}$ரயந்நசலம் ஸ்தி$^{2}$ர: ।
**सम्प्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥**
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்$^{3}$ரம் ஸ்வம் தி$^{3}$ஶஶ்சாநவலோகயந் ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 14**

மனவமைதி பயமற்றோன் பிரம்மச்சாரியும்
விரதமுளோனும் மனதைவச மாக்கியோனும் ।
மனமொருநிலைப் பட்டும்,என்பால் சித்தமும்
எனையேயிலக்கா யமரவேண்டும் தியானத்திலே ॥

**प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।**
ப்ரஶாந்தாத்மா விக$^{3}$தபீ$^{4}$ர்ப்$^{3}$ரஹ்மசாரிவ்ரதே ஸ்தி$^{2}$த: ।
**मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥**
மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

அத்தியாயம்: 06 பாடல்: 15

இவ்விதம் கணப்பொழுதும் தன்மனதை
தியானத்தி லிருத்தியே,மன மடங்கிய ।
யோகியவன் என்னிடமுள்ள முக்தியில்
முற்றுப்பெறும் சாந்தியைய டைகின்றான் ॥

**युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।**
யுஞ்ஜந்நேவம் ஸதா[3]த்மாநம் யோகீ[3] நியதமாநஸ: ।
**शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥**
ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தா[2]மதி[4]க[3]ச்ச[2]தி ॥

அத்தியாயம்: 06 பாடல்: 16

அர்ஜுனா! மிகஉண்போனுக்கு [1]யோகமில்லை
அறவேயுண் ணாதோனுக்கு மஃதில்லையே ।
அதிகமுற ங்குவோனுக்குத் தியானமில்லை
அதிகமாய் விழித்திருப்போ னுக்குமில்லையே ॥

[ 1 யோகம் = தியானம் ]

**नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।**
நாத்யஶ்நதஸ்து யோகோ[3]ऽஸ்தி ந சைகாந்தமநஶ்நத: ।
**न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥**
ந சாதிஸ்வப்நஶீலஸ்ய ஜாக்[3]ரதோ நைவ சார்ஜுந ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 17**

உண்பதிலு முலாவுவதிலு மிதமாயிருப்போரும்
கடமையை அளவுடன் செய்பவருக்கும் ।
விழிப்புமு றக்கமுமள விலுள்ளோருக்கும்
யோகம்துன் பத்தைத்து டைப்பதாகிறதே ॥

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥
யுக்தஸ்வப்நாவபோ$^{3}$த$^{4}$ஸ்ய யோகோ$^{3}$ ப$^{4}$வதி து:$^{3}$க$^{2}$ஹா ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 18**

நன்றாயடக் கியசித்தம் எப்பொழுது
ஆத்மாவிலே நிலைத்துளதோ, அப்பொழுது ।
அனைத்துப்பொருட் களினின் றும்பற்று
நீங்கியோன் [1]தியானம்கூடி யவனாவான் ॥

[ 1 யுக்த: = தியானம் கூடியவன் ]

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
யதா$^{3}$ விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்ட$^{2}$தே ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥
நி:ஸ்ப்ரு'ஹ: ஸர்வகாமேப்$^{4}$யோ யுக்த இத்யுச்யதே ததா$^{3}$ ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 19**

எவ்விதம் காற்றில்லா விடத்திலேயுள்ள
தீபமானது அசையாமலி ருக்குமோ ।
அவ்விதம் மனமடங்கி ஆத்மதியானம்-
பழகும்யோகிக்கு உவமையாய் எண்ணுவர் ॥

**यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।**
யதா² தீ³போ நிவாதஸ்தோ² நேங்க³தே ஸோபமா ஸ்ம்ரு'தா ।
**योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥**
யோகி³நோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக³மாத்மந: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 20**

எப்பொழுது யோகப்பயிற்சி யிலடங்கிய
மனமானது ஆத்மாவிலேயே நிலைநிற்கிறதோ ।
அப்பொழுது மேலும்தன்னில் தன்னைக்கண்டு
தன்னிலேயே மகிழவடைந் திருக்கின்றானே ॥

**यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।**
யத்ரோபரமதே சித்தம் நிருத்³த⁴ம் யோக³ஸேவயா ।
**यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥**
யத்ர சைவாத்மநாத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 21**

எச்சுகம் புத்தியாலறி யப்படுவதும்
முடிவிலாது புலன்களுக் கெட்டாதுமுளதோ ।
அதையறிந் தும்மேலுமதி லேநின்றவனாய்
உள்ளதைய றிந்ததினின்று மசைவதில்லையே ॥

सुखमात्यन्तिकं यत्तद् बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
ஸுக2மாத்யந்திகம் யத்தத்3 பு3த்3தி4க்3ராஹ்யமதீந்த்3ரியம் ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்தி2தஶ்சலதி தத்த்வத: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 22**

மேலுமெதைய டைந்தபின் வேறுலாபத்தை
அதிகமென் றெண்ணுவதில் லையோ,எதில்- ।
நிலைத்துநின் றவன்மிகப் பெரியதான-
துக்கத்தாலு மசைக்கப் படுவதில்லையோ.... ॥

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
யம் லப்3த்4வா சாபரம் லாப4ம் மந்யதே நாதி4கம் தத: ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥
யஸ்மிந்ஸ்தி2தோ ந து:3கே2ந கு3ருணாபி விசால்யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 23**

துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரிதல்
யோகமென்று சொல்லப்ப டுவதாயறிக ।
தளர்விலா சித்தத்துடனும் உறுதியான
மனதுடனும் [1]அவ்யோகத்தைப் பயிலவேண்டும் ॥

[ 1 அவ்யோகம் = முன்னர் சொல்லப்பட்ட அவ்யோகத்தை ]

तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
தம் வித்³யாத்³ து:³க²ஸம்யோக³வியோக³ம் யோக³ஸம்ஜ்ஞிதம் ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥
ஸ நிஶ்சயேந யோக்தவ்யோ யோகோ³ऽநிர்விண்ணசேதஸா ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 24**

சங்கல்பத் தினின்றுதோன் றியஆசைகள-
-னைத்தையும் மிச்சமில்லாமல் துறந்தும் ।
மனத்தினால் புலக்கூட்டத் தையெல்லாம-
-னைத்துப்பக் கத்தினின்றும் நன்கடக்கிப். . . .. ॥

सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
ஸங்கல்பப்ரப⁴வாந்காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வாநஶேஷத: ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥
மநஸைவேந்த்³ரியக்³ராமம் விநியம்ய ஸமந்தத: ॥

அத்தியாயம்: 06 பாடல்: 25

பகுத்தறிவு டன்கூடிய புத்தியினால்
மனதையாத் மாவில்நிலை நிற்கச்செய்து ।
மெதுமெதுவா யொடுங்கச் செய்யவேண்டும்,
வேறெதையு மேசிந்திக் காதிருந்தவாறே ॥

शनैः शनैरुपरमेद् बुद्ध्या धृतिगृहीतया ।
ஶனை: ஶனைருபரமேத்[3] பு[3]த்[3]த்[4]யா த்[4]ரு'திக்[3]ரு'ஹீதயா ।
आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥
ஆத்மஸம்ஸ்த[2]ம் மந: க்ரு'த்வா ந கிஞ்சித[3]பி சிந்தயேத் ॥

அத்தியாயம்: 06 பாடல்: 26

மனமானது யுறுதியற்றுமெக் காரணத்தினால்
எதனெதனி டத்திலேய லைகின்றதோ ।
அதனதனி டத்திலிருந்த ழைத்துவந்து
ஆத்மாவினி டத்திலேயிருக்கச் செய்வாயாக ॥

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்தி[2]ரம் ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥
ததஸ்ததோ நியம்யைததா[3]த்மந்யேவ வஶம் நயேத் ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 27**

ஆழ்அமைதி யுள்ளமன முடையோனும்
[1]ரஜோகுணவே கம்தணிந் துபாவதோஷங்- ।
-களற்றவ னும்பிரம்ம மாய்த்தனையறியும்
இந்தயோகி யைஉத்தம சுகம்சேர்கின்றதே ॥

[ 1 ரஜஸம் = ரஜோகுண வேகம் = மனக்கொந்தளிப்பை அளிக்கும் குணம் ]

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।**
ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகி³நம் ஸுக²முத்தமம் ।
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥**
உபைதி ஶாந்தரஜஸம் ப்³ரஹ்மபூ⁴தமகல்மஷம் ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 28**

இவ்விதமே யெப்போதும் தன்னையிணைத்துக்
கொண்டவப் பாவங்களற் றயோகியானவன் ।
[1]பிரம்மத் திலொன்றுபடு வதால்தோன்றும்
[2]அளவற்ற ஆனந்தத் தையடைகின்றானே ॥

[ 1 பிரம்மத்தில் = பிரம்ம தத்துவத்தில்; 2 அத்யந்தம் = அளவற்ற = முடிவில்லா ]

**युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।**
யுஞ்ஜந்நேவம் ஸதா³த்மாநம் யோகீ³ விக³தகல்மஷ: ।
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥**
ஸுகே²ந ப்³ரஹ்மஸம்ஸ்பர்ஶமத்யந்தம் ஸுக²மஶ்நுதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 29**

ஆத்மயோகத் தில்மன மொடுங்கியவனும்
எல்லாவற்றி லும்சமநோக் குடனிருப்போனும் ।
தன்னிலேஅசை யுமசையாவனைத் துயிர்களையும்
மேலும்[1]தன்னை [2]யெல்லாவுயிர்களி லும்காண்கிறான் ॥

[ 1 ஆத்மானம் = ஆத்மனி = தன்னை, 2 எல்லாயுயிர்களிலும் = பிரும்மா முதல் புல் வரையுள்ள அனைத்து ]

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ஸர்வபூ⁴தஸ்த²மாத்மாநம் ஸர்வபூ⁴தாநி சாத்மநி ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥
ஈக்ஷதே யோக³யுக்தாத்மா ஸர்வத்ர ஸமத³ர்ஶந: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 30**

எவனென்னை எல்லாவற்றி லும்காண்கின்றானோ
எல்லாவற் றையுமென்னி டமேகாண்கிறானோ ।
அவனிடமி ருந்துநான் மறைவதில்லை
அவனுமென் னிடமிருந்து மறைவதில்லையே ॥

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 31**

எவன் அனைத்துயிர்களிலு முறையும்
[1]என்னை ஒன்றேயெனஎண்ணி நிலைநின்று ।
எனையே [2]தொழுகின்றானோ அந்தயோகீயானவன்
எப்பாங்கி லிருப்பினுமென்னி டத்தேயுளன் ॥

[ 1 மாம் = என்னை = பிரம்மமாகிய என்னை; 2 பஜதி = வழிபடுதல் / காணுதல் / தொழுதல் ]

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
ஸர்வபூ⁴தஸ்தி²தம் யோ மாம் ப⁴ஜத்யேகத்வமாஸ்தி²த: ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥
ஸர்வதா² வர்தமாநோऽபி ஸ யோகீ³ மயி வர்ததே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 32**

எவன்தன்னை உவமையாயெண்ணி, அர்ஜுனா!
எப்பொழுதும் சுகத்தையும் துக்கத்தையும் ।
அனைத்திலும் சமமாய்க் காண்கின்றானோ
அந்தயோகி மேலோனெனக் கருதப்படுகிறான் ॥

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥
ஸுக²ம் வா யதி³ வா து:³க²ம் ஸ யோகீ³ பரமோ மத: ॥

அத்தியாயம்: 06 பாடல்: 33

**“அர்ஜுனன் புகன்றான்”**
மதுசூதனா! சமமாய்க் காணுதலெனும்
இந்தயோகம் உம்மால் உபதேசிக்கப்பட்ட- ।
இதற்கு நிலையாயுள்ள இருப்பையான்
[1]மனச்சஞ்சலத் தினால்காண் கிறேனில்லை ।

[ 1 சஞ்சலத்வாத் = மனச்சஞ்சலத்தினால் ]

**अर्जुन उवाच ।**
**அர்ஜுந உவாச ।**
योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
யோSயம் யோக³ஸ்த்வயா ப்ரோக்த: ஸாம்யேந மது⁴ஸூத³ந ।
एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥
ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத்ஸ்தி²திம் ஸ்தி²ராம் ॥

அத்தியாயம்: 06 பாடல்: 34

கிருஷ்ணா! மனமலையும் தன்மையானதன்றோ
கலக்கமும்,வலிமை யும்திண்மையு மானதன்றோ? ।
அதனை யடக்குதல் காற்றைஅடக்குவது-
போல்கடின மானதெனநா னெண்ணுகிறேன் ॥

चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद् दृढम् ।
சஞ்சலம் ஹி மந: க்ரு'ஷ்ண ப்ரமாதி² ப³லவத்³ த்³ரு'ட⁴ம் ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥
தஸ்யாஹம் நிக்³ரஹம் மந்யே வாயோரிவ ஸுது³ஷ்கரம் ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 35**

**"ஸ்ரீபகவான் பகர்ந்தார்"**

பெருந்தோளா! ஐயமில்லை மனதின்தன்மை
அடக்குதற் கரிதுமலை வதும்தான் ।
குந்திமகனே! தொடர்ப யிற்சியாலும்
வைராக்யத் தாலுமடக் கவியலுமே ॥

**श्रीभगवानुवाच ।**

**ஸ்ரீப$^{4}$க$^{3}$வானுவாச ।**

**असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।**

அஸம்ஶயம் மஹாபா$^{3}$ஹோ மநோ து$^{3}$ர்நிக்$^{3}$ரஹம் சலம் ।

**अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥**

அப்$^{4}$யாஸேந து கௌந்தேய வைராக்$^{3}$யேண ச க்$^{3}$ரு'ஹ்யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 36**

மனதைய டக்காதவனால் யோகமடைய
வியலாது என்பதென்க ருத்து,மற்றும் ।
மனதைய டக்கியவன் உபாயத்தாலும்
முயற்சி செய்வதாலும டையவியலுமே ॥

**असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।**

அஸம்யதாத்மநா யோகோ$^{3}$ து$^{3}$ஷ்ப்ராப இதி மே மதி: ।

**वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥**

வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயத: ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 37**

**"அர்ஜுனன் புகன்றான்"**
கிருஷ்ணா! சிரத்தையுடை யோனாயினும்
முயற்சி யிலாதவனால் யோகத்தினின்றும் ।
நழுவிய மனமுடையோன் யோகம்முழுமை
பெறாமல் எக்கதியினை அடைகின்றான் ॥

**अर्जुन उवाच ।**
**அர்ஜுந உவாச ।**
अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
அயதி: ஶ்ரத்³த⁴யோபேதோ யோகா³ச்சலிதமாநஸ: ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥
அப்ராப்ய யோக³ஸம்ஸித்³தி⁴ம் காம் க³திம் க்ரு'ஷ்ண க³ச்ச²தி ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 38**

[1]பெருந்தோளாய் [2]பிரம்மப்பா தையில்மதி
மயங்கியவன், நிலைபெறாது இரண்டு- ।
பாதையிலிருந் தும்வழுவியே சிதறுண்ட
மேகம்போலல் லவாஅழிவ டைகின்றான் ॥

[ 1 மஹாபாஹோ! = பெருந்தோளாய்= கிருஷ்ணா;
2 ப்ரஹ்மண: பதி = ஞானப்பாதை / பிரம்மப்பாதை ]

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
கச்சிந்நோப⁴யவிப்⁴ரஷ்டஶ்சி²ந்நாப்⁴ரமிவ நஶ்யதி ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥
அப்ரதிஷ்டோ² மஹாபா³ஹோ விமூடோ⁴ ப்³ரஹ்மண: பதி² ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 39**

ஹேகிருஷ்ணா! எனதிந்த ஐயத்தையறவே
விலக்கு வதற்குத் தகுதியானவர்நீரே ।
தங்களைக் காட்டிலும்இவ் ஐயத்தை
நீக்குபவர் நிச்சயமாய் வேறொருவரில்லையே ॥

एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
ஏதந்மே ஸம்ஶயம் க்ரு'ஷ்ண சே²த்துமர்ஹஸ்யஶேஷத: ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥
த்வத³ந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சே²த்தா ந ஹ்யுபபத்³யதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 40**

**"ஸ்ரீபகவான் பகர்ந்தார்"**
பார்த்தனே! அவனுக்கு இம்மையிலும்
அழிவில்லை, அழிவில்லையே மறுமையிலும் ।
[1]மகனே!நன் மையைச்செய் பவரெவரும்
அடையார் துன்பகதியை நிச்சயமாய் ॥

[ 1 தாத = மகனே ]

**श्रीभगवानुवाच ।**
**ஸ்ரீப⁴க³வாநுவாச ।**
पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
பார்த² நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்³யதே ।
न हि कल्याणकृत्कश्चिद् दुर्गतिं तात गच्छति ॥
ந ஹி கல்யாணக்ரு'த்கஶ்சித்³ து³ர்க³திம் தாத க³ச்ச²தி ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 41**

யோகத்தினின்று வழுவியவன் புண்ணியம்
செய்தோருலகங் களையடைந்து நெடிதுகாலம்- ।
வாழ்ந்தபின், ஆசாரமுடன் கூடிய
செல்வர்களி னில்லத்திலே பிறக்கின்றான் ॥

प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।
ப்ராப்ய புண்யக்ரு’தாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கே[3]ஹே யோக[3]ப்[4]ரஷ்டோऽபி[4]ஜாயதே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 42**

அல்லதிவன் அறிவாளிக ளாம்யோகிகளி-
னில்லத்தில் பிறக்கின்றான், இவ்விதமான ।
பிறப்பானது எதுவோ,அது உலகத்தில்
நிச்சயம் அடைவதற் கரிதானதாகுமே ॥

अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
அத[2]வா யோகி[3]நாமேவ குலே ப[4]வதி தீ[4]மதாம் ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥
ஏதத்[3]தி[4] து[3]ர்லப[4]தரம் லோகே ஜந்ம யதீ[3]த்[3]ரு’ஶம் ॥

அத்தியாயம்: 06 பாடல்: 43

[1]குருநந்தனா! முற்பிறவி[2]தே கத்திலடைந்த
யோகபுத்தியை இப்பிறவியி லடைகின்றான் ।
மேலுமேஅதை விடஅதிகமாய் முயற்சியைச்-
செய்கிறான்; யோகபுத்தி முழுமைபெறவே ॥

[ 1 குருநந்தனா = குருவம்சத்தை மகிழ்விப்போனே / குருவம்சத்தவனே;
2 தேகம் = சரீரம் / உடல் ]

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
தத்ர தம் பு³த்³தி⁴ஸம்யோக³ம் லப⁴தே பௌர்வதே³ஹிகம் ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥
யததே ச ததோ பூ⁴ய: ஸம்ஸித்³தௌ⁴ குருநந்த³ந ॥

அத்தியாயம்: 06 பாடல்: 44

அவன்தன் முயற்சியின் றியேமுற்பிறவி
[1]அப்யாஸத் தாலிழுக்கப் படுகின்றானே ।
யோகதத்து வமறியமுயல் பவனும்கூட
[2]வேதகர்ம பாகத்தைக்க டக்கின்றானே ॥

[ 1 அப்யாஸ = விடாமுயற்சி; 2 சப்த பிரம்ம = வேத கர்ம பாகம் ]

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
பூர்வாப்⁴யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ: ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥
ஜிஜ்ஞாஸுரபி யோக³ஸ்ய ஶப்³த³ப்³ரஹ்மாதிவர்ததே ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 45**

ஆனால்முழு முயற்சியுடை யயோகியோ
பாவங்கள் நீங்கிப்புனித னாயாகியே ।
பலபிற விகளில்பக்கு வமடைந்தே
அதனால்மே லாம்கதியைய டைகின்றானே ॥

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।
ப்ரயத்நாத்[3]யதமாநஸ்து யோகீ[3] ஸம்ஶுத்[3]த[4]கில்பி[3]ஷ: ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥
அநேகஜந்மஸம்ஸித்[3]த[4]ஸ்ததோ யாதி பராம் க[3]திம் ॥

**அத்தியாயம்: 06 பாடல்: 46**

தவமுடையோ ரினும்யோகீ மேலானவன்
வேதமறிந்தோ ரினும்யோகீ மேலானவன் ।
செயல்புரிவோ ரினும்யோகீ மேலானவனே
ஆதலால்யோகீ யாவாய்நீ அர்ஜுனா! ॥

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
தபஸ்விப்[4]யோऽதி[4]கோ யோகீ[3] ஜ்ஞாநிப்[4]யோऽபி மதோऽதி[4]க: ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥
கர்மிப்[4]யஶ்சாதி[4]கோ யோகீ[3] தஸ்மாத்[3]யோகீ[3] ப[4]வார்ஜுந ॥

எவன்முழு நம்பிக்கையுட னும்,சித்தம்
என்பால்ல யித்துமுள்ளோன் தியானத்தால்- ।
என்னைத்தொழு கின்றானோ,அவன் யோகிகளில்
எல்லாம்சி றந்தோனென்ப தென்கருத்து ॥

**योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।**

யோகி[3]நாமபி ஸர்வேஷாம் மத்[3]க[3]தேநாந்தராத்மநா ।

**श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥**

ஶ்ரத்[3]தா[4]வாந்ப[4]ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥





## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## "தியானத்தில் தெளிவு"

எனும் இவ்வாறாம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
ஓம் தத்ஸதி$^{3}$தி ஸ்ரீமத்$^{3}$ப$^{4}$க$^{3}$வத்$^{3}$கீ$^{3}$தாஸூபநிஷத்ஸு

ब्रह्मविद्यायां योगशास्त्रे
ப்$^{3}$ரஹ்மவித்$^{3}$யாயாம் யோக$^{3}$ஶாஸ்த்ரே

श्रीकृष्णार्जुनसंवादे
ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே$^{3}$

आत्मसंयमयोगो नाम
ஆத்மஸம்யமயோகோ$^{3}$ நாம

षष्ठोऽध्यायः || or ध्यानयोगः
ஷஷ்டோ$^{2}$Sத்$^{4}$யாய: ॥ [அ] த்$^{4}$யாநயோக$^{3}$:

# நூலாசிரியர்



**ஆச்சார்யர்**

உலக சின்மய மிஷன் ஸ்தாபகர் குருதேவர் ஸ்வாமிசின்மயநந்தரின் தமிழ் சாந்தீபநீ சாதனாலய –வேதாந்த குருகுலத்தால் ஈர்க்கப்பட்டு, சின்மய மிஷன் தமிழில் நிகழ்த்தும் ஆன்மீக குருகுலப் பயிற்சியில் 1991-ல் சேர்ந்து, ஆச்சார்யர், தவத்திரு ஸ்வாமி வாகீஶானந்த ஸரஸ்வதி அவர்களுடனிருந்து மூன்று ஆண்டுகள் வேதாந்த சாஸ்த்திரங்களை முறைப்படிப் பயின்றார்.

இவ்வான்மீகப் பயிற்சியின் நிறைவில், 1993-ல் பிரம்மச்சாரி தீட்சை பெற்று, 2002 வரை சின்மய மிஷன், சிறுவாணி, கோயம்புத்தூர் கிளையில் சேவை செய்து வந்தார். பின்னர் 2020 வரை சேலம், ஹோசூர் ஆகிய சின்மய மையங்களின் ஆச்சார்யராக இருந்தார்.

ஶ்ரீமத் பகவத்கீதையின் 18 அத்தியாயங்களையும் விரிவாக **ஸ்ரவண சாதனை** என்ற முறையில் மூன்று முறை நிகழ்த்தியுள்ளார்.

ஶ்ரீமத் பகவத்கீதை, உபநிஷத்துகள், கைவல்யநவநீதம், திருவாசகம், வேதாந்த மற்றும் பக்தி நூல்களின் கருத்துக்களை ஆன்மீக சாதகர்களுக்கு விளக்கி இந்தியாவின் பல பகுதிகள், மற்றும் ஶ்ரீலங்கா ஆகிய இடங்களில் இதுகாறும் **150 -க்கும் மேற்பட்ட ஞான வேள்விகள்**, **ஆன்மீக முகாம்கள்,** மற்றும் **சாதனை** வகுப்புகளை நிகழ்த்தியுள்ளார்.

**பள்ளிகள் மற்றும் கல்லூரிகளில் C-VEP (C**hinmaya **V**aluebased **E**ducation **P**rogramme**)** என்ற மாணவ, மாணவிகளுக்கான குணங்களுடன் கூடிய ஆளுமைப் பண்புகளை விதைக்கும் வகுப்புகளை **I.**ராமாயணம்-Value vs Values; **II.**பாகவதம்-Young Leaders & Perfect Leader**; III.**ஹனுமான் சாலிசா-Personality Development; மற்றும் **IV.**விபீஷண கீதை–Key to Success ஆகிய நூல்களின் துணைகொண்டு **நிகழ்த்தி** வந்தார்.

**மேலும் பெருநிறுவனங்களில்** [Corporate Companies] workshop, seminar like **P-Cube** [Potential–Performance–Perfect], 4-A [Aim–Analyse–Act-Achive] போன்ற பண்புகள், நிர்வாக ,ஆளுமைத்திறன் வகுப்புகளை நிகழ்த்திவந்தார் .

இவர் ஆழ்ந்த கருத்துக்களையும் மிக எளிமையாகவும், நகைச்சுவை உணர்வுடனும், அன்றாட வாழ்வியல் உதாரணங்களின் மூலம் விளக்கிக் கூறும் திறன் படைத்தவர்.

இப்படிப்பட்ட இவர் உள்ளத்தின் உந்துதலால் உலகிற்கு உதவும் பொருட்டு, ஶ்ரீமத் பகவத்கீதை ஶ்லோகங்களின் நேர் அர்த்தத்தை அளிக்கும் தமிழ்ப்பாடல்களாய் இயற்றியுள்ளார். இது நூலாய் வெளிவருவது அனைவருக்கும் நற்பயனை நல்கும் என்பது திண்ணம். கீதையின் ஸம்ஸ்கிருத ஶ்லோகங்களை படித்துப் பயில இயலாவிடினும், தமிழ்ப்பாடல்களைப் படித்தும், பயின்றும் முழுப்பலனையும் பெறுவோமாக.

ஶ்ரீமத் பகவத்கீதை ஶ்லோகங்களைத் தமிழ்ப்பாடல்களாய் இயற்றிவர்:

**ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி**

**ஹரி: ஓம்!**